

# திருமலை திருப்பதி தேவஸ்தானம், திருப்பதி.

## திருமலையில் ஆர்ஜித சேவைகள்

| வ. எண் | சேவை/உத்ஸவங்களின் பெயர்கள் | அனுமதிக்கப் படும் ஆட்களின் எண்ணிக்கை | காலம் | நாள் | ஒவ்வொரு சீட்டின் தொகை |
|---|---|---|---|---|---|
| 1. | சுப்ரபாதம் | ஒருவர் | காலை 3-00 | தினமும் | ரூ. 100/- |
| 2. | தோமாலை சேவை | ஒருவர் | காலை 3-45 to 4-30 வரை | தினமும் | ரூ. 200/- |
| 3. | அர்ச்சனை | ஒருவர் | காலை 4-30 to 5-30 வரை | தினமும் | ரூ. 200/- |
| 4. | ஏகாந்தசேவை | ஒருவர் | மாலை 10-30க்கு மேல் | தினமும் | ரூ. 100/- |
| 5. | கல்யாணோத்ஸவம் | ஐவர் | காலை 10-30 | தினமும் | ரூ. 2500/- |
| 6. | சிறப்பு கல்யாணோத்ஸவம் | இருவர் | காலை 10-30 | தினமும் | ரூ. 750/- |
| 7. | ஆர்ஜித பிரம்மோத்ஸவம் | ஐவர் | மாலை 1-00 | தினமும் | ரூ. 500/- |
| 8. | தோலோத்ஸவம் | அறுவர் | மாலை 1-30 | தினமும் | ரூ. 750/- |
| 9. | அர்ச்சனானந்தர தரிசனம் | அறுவர் | காலை 5-00 | வெள்ளிக் கிழமைகள் தவிர | ரூ. 100/- |
| 10. | ஆமந்த்ரணோத்ஸவம் | ஒருவர் | காலை 3-30 | வெள்ளிக் கிழமைகள் தவிர | ரூ. 600/- |
| | | வெள்ளிக் கிழமைகளில் ஒருவர் | காலை 6-30 மணி | வெள்ளிக் கிழமை மட்டும் | ரூ. 600/- |
| 11. | தோமாலை மற்றும் அர்ச்சனை | ஒருவர் | காலை 6-30 மணி | வெள்ளிக் கிழமைகள் மட்டும் | ரூ. 400/- |
| 12. | சஹஸ்ர தீபஅலங்காரசேவை | ஐவர் | மாலை 5-30 மணிக்கு பிறகு | தினமும் | ரூ. 500/- |

### வாராந்திர சேவைகள்

| வ. எண் | சேவை | ஆட்கள் | காலம் | நாள் | தொகை |
|---|---|---|---|---|---|
| 1. | விசேஷ பூஜை | ஐவர் | காலை 6-00 | திங்கள் | ரூ. 3000/- |
| 2. | அஷ்டதளபாத பத்மாராதனம் | ஐவர் | காலை 5-30 | செவ்வாய் | ரூ. 3500/- |
| 3. | சஹஸ்ரகலசாபிஷேகம் | அறுவர் | காலை 5-30 | புதன் | ரூ. 5000/- |
| 4. | திருப்பாவாடைசேவை | அறுவர் | காலை 5-30 | வியாழன் | ரூ. 5000/- |
| 5. | பூராபிஷேகம் | ஒருவர் | காலை 3-30 | வெள்ளி | ரூ. 750/- |
| 6. | புனுகுப் பாத்திரம் | ஒருவர் | மாலை 3-30 | வெள்ளி | ரூ. 300/- |
| 7. | கத்தூரிக்கிண்ணம் | ஒருவர் | மாலை 3-30 | வெள்ளி | ரூ. 150/- |
| 8. | நிஜபாத தரிசனம் | ஒருவர் | காலை 5-30 | வெள்ளி | ரூ. 100/- |
| 9. | ஆடைஅலங்கார சேவை | இருவர் (கணவன்-மனைவி) | காலை 3-30 | வெள்ளி | ரூ.12,250/- |

### வருடாந்திர சேவைகள்/உத்ஸவங்கள்

| வ. எண் | சேவை | ஆட்கள் | காலம் | நாள் | தொகை |
|---|---|---|---|---|---|
| 1. | பவித்ரோத்ஸவம் | ஐவர் | காலை 8-00 | ஆகஸ்ட் | ரூ. 7500/- |
| 2. | வஸந்தோத்ஸவம் | பதின்மர் | மாலை 2-00 | ஜனவரி | ரூ. 3000/- |
| 3. | புஷ்பயாகம் | ஐவர் | காலை 6-00 | நவம்பர் | ரூ. 3500/- |
| 4. | அபித்யேக அபிஷேகம் | ஐவர் | காலை 8-00 | ஜூன் | ரூ. 2000/- |
| 5. | பத்மாவதி பரிணயம் | ஐவர் | மாலை 3-00 | மே | ரூ. 5000/- |
| 6. | புஷ்ப பல்லக்கு | ஐவர் | மாலை 5-30 | ஜூலை | ரூ. 1000/- |
| 7. | கோயில் ஆழ்வார் திருமஞ்சனம் | பதின்மர் | காலை 11-00 | வருடத்திற்கு நான்குமுறை | ரூ. 3000/- |

(உகாதிக்கு முன்னாள், ஆனிவார ஆஸ்தானம், சுவாமி பிரம்மோத்ஸவம் மற்றும் வைகுண்ட ஏகாதசி)

| வ. எண் | சேவை | ஆட்கள் | காலம் | நாள் | தொகை |
|---|---|---|---|---|---|
| 8. | தெப்போத்ஸவம் | ஐவர் | மாலை 6-00 | வருடத்திற்கு 5 நாட்கள் | ரூ. 2500/- (ஒருநாள்) |

மேலும் தகவல்களுக்கு அணுகவும்: 79277, 77777 Ext.3679 மற்றும் 3589



மாசிப்புனர்பூசம் காண்மினின்று மண்ணுலகிர்
தேசித்திவசத்துக் கேதென்னில் - பேசுகின்றேன்
கொல்லி நகர்க்கோன் குலசேகரன் பிறப்பால்
நல்லவர்கள் கொண்டாடும் நாள்.

[உலகோர்களே! இன்றைய தினம் மாசி மாதத்தில் புனர்வசு நட்சத்திரம் என்று கண்டு கொள்ளுங்கள். இந்தத் தினத்துக்குப் பெரு மதிப்பு யாதெனில் சொல்லுகின்றேன். கொல்லி என்னும் நகரத்துக்குத் தலைவரான குலசேகராழ்வாருடைய அவதாரத் தாலே பெரியோர்கள் கொண்டாடும் நாளாகும் இது.]

-உபதேசரத்தின மாலை-13




திருமலை திருப்பதி தேவஸ்தானம், திருப்பதி.

# ஸ்ரீ பத்மாவதி தாயார் திருக்கோயில்

# திருச்சானூர்.

## பத்மாவதி பரிணயம்

(கல்யாணோத்ஸவம்)



**தினசரி காலை 10-30 மணிமுதல் 12-00 மணி வரை**

* ரூ. 500/- கட்டணம் செலுத்தி இந்த ஆர்ஜித சேவையில் பங்கு கொள்ளும் குடும்பத்தினருக்கு ஆடை அன்பளிப்பும், ஐந்து நபர்களுக்கு இலவச தரிசனமும் கிடைக்கும்.
* பணத்தை நேரிடையாக திருக்கோயில் பேஷ்காருக்கு செலுத்தலாம் அல்லது திருமலை திருப்பதி தேவஸ்தான செயலாட்சித்தலைவர் பேருககு ஏதாவது தேசீயமயமாக்கப்பட்ட வங்கியிலிருந்து ரூ. 500க்கான D.D.யை பெற்று அனுப்பலாம்.

---

கண்ணிற்கு விருந்தளிக்கும் கல்யாணோத்ஸவத்தில்
பங்குகொண்டு தாயாரின் திருவருளுக்கு பாத்திரமாகுங்கள்.

---

செயலாட்சித் தலைவர்.




"வேங்கடமே விண்ணோர் தொழுவதுவும் மெய்ம்மையால்
வேங்கடமே மெய்வினைநோய் தீர்ப்பதுவும்"


மார்ச் - 1998

மலர் 28 இதழ் 10

தனிப்பிரதி ரூ. 4/- வருடச்சந்தா 48/-



சிறப்பாசிரியர் :

**திரு. எம்.கே.ஆர். விநாயக், ஐ.ஏ.எஸ்.**
செயலாட்சித்தலைவர்,
தி.தி.தேவஸ்தானம்,
திருப்பதி.

* * *

ஆசிரியர்:

**திரு. என்.எஸ். ராமமூர்த்தி, எம்.ஏ.,**

* * *

துணை ஆசிரியர்:

**திரு. வ.கோ. சொக்கலிங்கம், எம்.ஏ.,**

* * *

அச்சிடுபவர்:

**திரு. எம். லக்ஷ்மண் ராவ்,**
மேலாளர்,
தி.தி.தேவஸ்தான அச்சகம்,
திருப்பதி.

* * *

பிரதிகளுக்கு:
EDITOR,
"Sapthagiri" T.T.D., Tirupati.
Phone : 22294


உள்ளுறை



இதழில் வெளியாகும் கட்டுரைகளுக்கும், கருத்துக்களுக்கும் அவ்வவ்வாசிரியப் பெருமக்களே பொறுப்பாவர். -ஆசிரியர்

அட்டைப்பட விளக்கம் :

முன் அட்டை : ஸ்ரீ லக்ஷ்மி - சித்திரம்: ஜெகதீஷ்.

பின் அட்டை : ஸ்ரீ அன்னமாச்சார்யா - சித்திரம்: கெ. துர்காம்பா.

# உங்களுடன்....

முச்சங்கம் மூவேந்தர் முப்பால் எனும் முப்பெரும் பெருமைகளைக் கொண்ட தாயாம் தமிழ்மொழி முத்தமிழான இயல், இசை, நாடகத்தைத் தன்னகத்தே கொண்டு தன்னிகரில்லா தனிச்சிறப்பினைப் பெற்று பாரெல்லாம் புகழும் பண்பாட்டு பெட்டகமாக விளங்கிவருகிறது என்றால் அது மிகையாகாது. அவ்வகையிலே இயல், இசை, நாடகத்தோடு அமைந்திருப்பதுதான் ஆழ்வார்களின் பாசுரங்கள்; நாயன்மார்களின் பாடல்கள்; தாசர்களின் கீர்த்தனைகள் ஆகும். அம்மூன்றிலே நடுநாயகமாக விளங்கும் இசைக்கு பெருமைகள் அதிகம். எப்படி என்று எண்ணத்தோன்றும்? உள்ளம் உவகை வெள்ளத்துள் மூழ்கும் பொழுது எழுவது இசையே! நோய் தரும் வருத்தத்தை மறக்கச் செய்வது இசையே! பயிர் செழித்து வளர்வதற்கு ஏதுவாவதும் இசையே! மழலை மொழி பேசும் சிறார்முகத்தில் மாறாத மகிழ்ச்சியை விளைவிப்பதும் இசையே! வழங்காதவரை கொடைவள்ளலாக மாற்றி வைப்பதும் இசையே! வரம் வேண்டி நிற்பார் அருள்பெறச் செய்வதும் இசையே! கருணை நோக்கி நிற்கும் பக்தர் அகம் உருகச் செய்வதும் இசையே!

மனிதன் தாய் வயிற்றிலிருந்து வந்தது முதற்கொண்டே இசைமழையில் நனைகின்றான். முதலில் தன்னை இந்த உலகிற்கு அறிமுகப்படுத்திடும் முதல்தெய்வமான தாயின் தாலாட்டிசையில் தவழ்கின்றான். பின்பு பள்ளியில் பயிலும் போது கதை பாடல்களும், வரலாற்றுப்பாடல்களும் அவனுடைய அறிவைத் தூண்டுவதாக அமைந்து விடுகின்றன. மேலும் அவன் மனப் பக்குவம் அடைந்த நிலையில் இறைவனின் தேவகானத்தில் மூழ்க வாய்ப்பு ஏற்படுகிறது. மானிடன் மட்டுமா இன்னிசைக்கு மயங்குகின்றான் என்றால் இல்லை. மண்ணுயிர்களும் மதி மயங்குகின்றன. எங்ஙனமென்னில்? வேணு கானத்தில் மயங்குகின்றன ஆநிரைகள்; மகுடிக்கு வழப்பட்டுச் சீறும் நாகமும் தன் சினத்தை மறந்து ஆடுகிறது. பாடும் குயிலும், ஆடும் மயிலும், ஓடும் நதியும், வீசும் தென்றலும் கண்ணனின் குழலோசை கேட்டுச் செயலற்று நின்றது ன்பதை சமய நூல்கள் நமக்கு அறிவிக்கின்றன.

இன்னிசையை விரும்பாதவர் இப்பூவுலகிலும் மேலுலகிலும் எவரும் இல்லை என்றே கூறலாம். மண்ணுயிரானாலும், மனிதனானாலும், இறைவனானாலும் இன்னிசைக்கு இலக்காக வேண்டியதுதான். இறைவனும் மதுரமான வேத கானத்தில் மூழ்கித் திளைக்கின்றான். எனவேதான் ஆழ்வார்கள் தீந்தமிழில் திராவிட வேதமான நாலாயிரத்தை நயமுற பண்ணிலிட்டு இசைத்து இன்புற்றுள்ளனர்.

அறிவியல்பூர்வமாகவும் இசை பல விந்தைகளைப் புரிகின்றது. தொண்டைக்குழல், நுரையீரல் போன்ற உடல் உறுப்புக்கள் இசை பயிற்சியினால் செம்மையடைகின்றன என்பதை உடல் நூல் வல்லுநர்கள் கூறுவதை நாம் உணரலாம். அத்துடன் மட்டுமா? உள்ள நோய்க்கு இசை அருமருந்தாகவும் பயன்படுகிறது.

சமய வளர்ச்சிக்கும் முன்னேற்றத்திற்கும் இசை பெரும் பங்கு வகிப்பதை யாவரும் அறிவர். பிறவிப்பயனை உணர்த்தி, ஆண்டவன் அருள் மழையில் நனையச் செய்து தெய்வீக ஆனந்தத்தை அடையும்படி செய்வது இசை. ஆன்மா தூய்மையடைய இசையாற்றும் தொண்டு மிகப்பெரியது. ஆண்

டவனை நாடிச் செல்லும் அன்பர்களுக்கு வழிகாட்டியாகவும் இசை இருந்து வருகிறது.

சமய வாதிக்கு தேவையான சத்வ குணத்தை அளிக்கவல்லது இசையாகும். இசை ஒருவனை சமாதி நிலைக்கு இட்டுச் செல்லும் பாதையாகவும் அமைகிறது. அசுர குணம் படைத்த இராவணனும் இசையின் மூலமாகத் தான் பரமேஸ்வரனை தரிசிக்கலானான்.

திருப்பாணாழ்வார் பெரிய பெருமாளான அரங்கனிடத்தே பரபக்தி, பரஜ் ஞான, பரமபக்தியோடு வேறொன்றும் அறியதவராய் அரங்கனுடைய திருப்பாதாதி கேசாந்தமாக அனுபவித்து "அண்டர் கோன் அணியரங்கன் என்ன முதினைக் கண்ட கண்கள் மற்றொன்றினைக் காணாவே" என்று பண்ணிலே இட்டுப் பாடி பரவசம் கொண்டுள்ளார். இது குறித்தே திருமலை நம்பிகள் "பாட்டினால் கண்டு வாழும் பாணர்தாள் பரவினோமே" என்று உரைத்ததைக் கொண்டு நாம் உணரலாம்.

தியாகராஜரும், புரந்தரதாசரும், மீராவும், அன்னமாச்சார்யாவும் மற்றும் துகாராம் போன்ற ஆன்மீக மகான்கள் இசையினாலே இறைவனை உணர்ந் தனர்.

இசையின் மகத்வம் மிகப்பெரிது. தியாகராஜ சுவாமிகளின் நல்லிசையி னால் இறந்த உயிரை மீட்கச் செய்தது; நகராத தேரினை நகர்த்தி ஓடச் செய்தது. முத்துசுவாமி தீக்ஷிதர் அவர்களின் இன்னிசை பெய்யாத மழையைப் பெய்வித்துள்ளது. நிற்காத மழையைப் போக வைத்துள்ளது. சாமா சாஸ்திரி அவர்களுடைய மதுர இசை தேவிக்கேற்ற அமுதமாக வரப்பிரஸாதத்தினைத் தரும்படி வைத்துள்ளது என்றால் இசையின் எல்லையை யாரால் அளவிட முடியும்.

அந்த வகையிலே இசையின் சிகரத்தை எட்டிப் பிடித்த இசைமேதையும் இவ்வுலகில் வாழ்ந்து வருகின்றார். அவர்தான் திருமதி. எம்.எஸ். சுப்புலக்ஷ்மி அம்மையார் அவர்கள். இவ்வம்மையார் தன்னலமற்ற இசைத்தொண்டோடு கூடிய சமயத்தொண்டினையும் நல்கி நாடுபோற்றும் பாராட்டுகளையும், அந் நாளிலே காந்தி, நேருவின் ஆசியினையும், இந்திய குடியரசு தலைவரால் பல விருதுகளையும் பெற்று வந்துள்ளார். இவர் கர்நாடக இசையின் சிறப்பினையும், நம்நாட்டின் சிறப்பினையும், நமது கலாச்சாரங்களின் மேன் மையினையும் வானளாவ உயர்த்திவிட ஒரு சாதனமாகவும் நமது நாட்டின் கலாசார தூதுவராகவும் இருந்து வருகிறார் என்றால் அது மிகையாகாது.

அம்மையார் அவர்கள் தி.தி. தேவஸ்தான ஆஸ்தான பாடகியாக இருப்ப தோடு மட்டுமின்றி சமயச் சிந்தனையாளராகவும் திகழ்ந்து வருகிறார். "தான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்" என்ற தமிழர் பண்பாட்டிற்கு ஏற்ப தன்னாலியன்ற வரை நற்பணிகளுக்கு தன்னுடைய இசைப் புலமையை பயன்படுத்துவது குறிப்பிடத்தக்கதாகும்.

அண்மையில் அம்மையார் அவர்களுக்கு "பாரத ரத்னா" விருதினை இந்தியக் குடியரசுத்தலைவர் அளித்து கௌரவித்துள்ளது பாராட்டுதற்குறியதாகும். இசைத்துறைக்கு இவ்விருது முதன்முறையாகுமென்றால் அம்மையாரின் கடின உழைப்பை அளவிட முடியாதன்றோ? சங்கீத கலாநிதி, பத்மபூஷண், பாரத ரத்னா, டாக்டர். திருமதி. எம்.எஸ். சுப்புலக்ஷ்மி அம்மையார் அவர்கள் இன்றும் போல் என்றும் இசையின் சிகரமாக இருந்து பல்லாண்டு காலம் பாரினில் வாழ அத்திருவேங்கடவன் கடைக்கண்ணை காட்டி அருள்புரிவாராக.

# செய்திச் சுருக்கம்

## திருவேங்கடவனின் பாரிவேட்டை உத்ஸவம்

பொங்கல் திருநாளை முன்னிட்டு 15-1-98 வியாழன் அன்று திருமலையில் திருவேங்கடவனின் பாரிவேட்டை உத்ஸவம் வெகு வைபவமாகக் கொண்டாடப்பட்டது.

திருமலையப்பன் அழகாக அலங்கரிக்கப்பட்டு நான்கு மாடவீதிகளிலும் திருவீதிவலம் வந்து திருமலைக் கோயிலுக்கு மூனறு கி.மீ. . தொலைவில் உள்ள பாரிவேட்டை மண்டபத்திற்குக் கொண்டுவரப் பட்டார். அங்கு சுவாமிக்கு சிறப்பு பூஜைகள் செய்யப்பட்டு பிறகு வேட்டைக்கு செல்லும நிகழ்ச்சியை அர்ச்சகர்கள் ஆரம்பித்தனர். அதன்பிறகு ஹரி கதை, அன்னமய்யா சங்கீர்த்தனை முதலான இசை நிகழ்ச்சிகளும் நடைபெற்றன.

இந்நிகழ்ச்சியில் தேவஸ்தான செயலாட்சித் தலைவர் திரு. எம்.கே.ஆர். விநாயக் அவர்கள், இணைச்செயலாட்சித்தலைவர் திரு. பாலசுப்ரமண்யம் அவர்கள், கோயில் துணைச் செயலாட்சித் தலைவர் திரு. ஸ்ரீனிவாசலு மற்றும் இதர உயர் அலுவலர்களும் கலந்து கொண்டு விழாவினைச் சிறப்பித்தனர்.

அன்றைய தினம் திருமலையிலிருந்து பாரிவேட்டை மண்டபத்திற்கு தி.தி. தேவஸ்தானம் மற்றும் அரசு போக்குவரத்து துறை இலவசமாக பேருந்துகளை இயக்கின.

## திருமலைக்கோயில் வருவாய்

1-1-98 அன்று திருமலையானுக்கு ரூ. 61 இலட்சம் வருவாய் வந்ததாக தேவஸ்தானச் செயலாட்சித் தலைவர் திரு. எம்.கே.ஆர். விநாயக் அவர்கள் தெரிவித்தார். ஜனவரி முதல்நாள் அன்று மாலை வரையிலும் சுமார் 80 ஆயிரம் பக்தர்கள் திருமலையானை தரிசித்தனர் என்றும், இவற்றிலே சிறப்பு நுழைவு வழியாக 27 ஆயிரம் பக்தர்கள் தரிசித்தனர் என்றும் அவர் குறிப்பிட்டார்.

ஆங்கில புதுவருடப் பிறப்பினை முன்னிட்டு ஜனவரி முதல்நாள் அன்று திருமலையான் சிறப்பு அலங்காரத்துடன் பக்தர்களுக்கு தரிசனம் தந்தார். வைரங்கள் பொதிக்கப்பட்ட சங்கு, சக்கரங்களுடன் திருமலையான் பக்தர்கள் கண்களுக்கு விருந்தளித்தார்.

## கோயில் ஆழ்வார் திருமஞ்சனம்

கலியுக கண்கண்ட கடவுளான திருமலை ஸ்ரீவேங்கடேஸ்வர சுவாமி திருக்கோயிலில் 6-1-98 செவ்வாய்க்கிழமையன்று கோயில் ஆழ்வார் திருமஞ்சனம் சிறப்பாக நடைபெற்றது.

இந்நிகழ்ச்சியின் போது ஆலயத்தை முழுவதும் தூய்மைபடுத்தி, வெவ்வேறு வாசனைப் பொருட்களை கோயிலின் முதன்மை இடங்களில் பூசினர். சம்பரதாய முறைப்படி வேத பண்டிதர்கள், அர்ச்சகர்கள் இந்நிகழ்ச்சியினை நிகழ்த்தினர். இதுபோது மஞ்சள், குங்குமம், நாமம், சந்தனம், கற்பூரம் போன்ற பொருட்களை வழங்கினர்.



ஜனவரி எட்டாம் நாள் ஏகாதசியை முன்னிட்டு இக் கோயில் ஆழ்வார் திருமஞ்சன நிகழ்ச்சி நடைபெற்றது. இந்த திருமஞ்சனம் வருடத்திற்கு நான்கு முறை உகாதி, ஆனிவார ஆஸ்தானம், பிரம்மோத்ஸவம், வைகுண்ட ஏகாதசி ஆகியவற்றின் போது நிகழ்த்துவர்.

இந்நிகழ்ச்சியில் மத்திய அமைச்சர் திரு. எஸ்.ஆர். பாலசுப்ரமண்யம், செயலாட்சித் தலைவர் திரு. எம்.கே. ஆர். விநாயக் அவர்கள், இணைச்செயலாட்சித் தலைவர் திரு. பாலசுப்ரமண்யம் அவர்கள், பொறுப்பாண்மைக்குழு உறுப்பினர் திரு. ராதாகிருஷ்ணராஜு மற்றும் இதர உயர் அலுவலர்களும் கலந்து கொண்டனர். அவர்களோடு 3000 ஆர்ஜித சேவை சீட்டு பெற்றுக் கொண்ட 22 குடும்பத்தினரும் பங்கு கொண்டனர்.

## வைகுண்ட ஏகாதசி

8-1-98 வியாழன் அன்று வைகுண்ட ஏகாதசி மகா உத்ஸவம் திருமலையான் திருக்கோயிலில் சிறப்பாக நடந்தது. இவ்விழாவினை முன்னிட்டு திருமலைக்கோயிலில் வைகுண்டவாசல் திறக்கப்பட்டது. மிக அழகாக அலங்கரிக்கப்பட்டிருந்த இந்த வைகுண்ட வாசலில் நுழைவதற்காக ஆயிரமாயிரம் பக்தர்கள் குழுமி இருந்தனர்.

வருடத்திற்கு ஒருமுறை திறக்கப்படும் இவ்வைகுண்ட ஏகாதசியை முன்னிட்டு திருமலையானை தரிசிப்பதற்கு சுமார் 80 ஆயிரம் பக்தர்கள் வந்திருந்தனர்.

## தங்கத்திருத்தேர்

வைகுண்ட ஏகாதசியை முன்னிட்டு திருமலையில் தங்கத் திருத்தேர் உத்ஸவம் நடைபெற்றது. சகலாபரணங்களோடு திருவேங்கடவன் ஸ்ரீதேவி, பூதேவி சமேதமாக திருத்தேரில் நான்கு மாடவீதிகளிலும் திருவீதி வலம் வந்தார். பக்தர்களின் இன்னருளுக்கு பாத்திரமானார்.

இந்நிகழ்ச்சியில் செயலாட்சித் தலைவர் திரு. எம்.கே.ஆர். விநாயக், இணைச் செயலாட்சித்தலைவர் திரு. பாலசுப்ரமண்யம், தலைமைப் பொறியாளர் திரு. முனிரெட்டி அவர்கள், பொறுப்பாண்மைக்குழு உறுப்பினர்கள் திரு. ராதாகிருஷ்ணராஜு, திரு. ராஜ மோகன் ரெட்டி, திரு. டி. ராமாநாயுடு மற்றும் இதர உயர் அலுவலர்களும் கலந்து கொண்டனர்.

வைகுண்ட ஏகாதசியை முன்னிட்டு சுவாமியை தரிசித்த முக்கிய பிரமுகர்களில் மாநில சட்டசபை சபாநாயகர் திரு. வை.ராமகிருஷ்ணய்ய, அமைச்சர்கள் திரு. ராமகிருஷ்ணராவ், திரு. ராஜய்ய முதலானோர் இடம் பெற்றிருந்தனர்.

## துஜஸ்தம்பத்திற்கு தங்கமுலாம்

அண்மையில் திருப்பதியில் உள்ள ஸ்ரீகோவிந்தராஜசுவாமி திருக்கோயில் துவஜஸ்தம்பத்திற்கு தங்கத்தால் மேற்பூசு வேயப்பட்டு தங்கமயமாக புதுப்பித்தனர். புராதனமான இந்த துவஜஸ்தம்பத்தை சுமார் 56 இலட்சம் செலவில் புதுப்பிததனர். பலிபீடத்தையும் புதுப்பித்தனர். இதுபோது திருக்கோயிலில் சம்ப்ரோக்ஷணையும், மஹாசாந்தி ஹோமமும் நடைபெற்றன.

## வைகானசாஸ்ரமத்தில் மஹா யாகம்

தெய்வீக அருளைப்பெற்றவரும் புதுதில்லி, சிங்கபூர், நியூ



யார்க் முதலான நகரங்களில் இயங்கிவரும் ஸ்ரீசக்தி விலாஸ் சித்த பிரம்மபீடம் மற்றும் ஸ்ரீசக்தி விலாஸ் இயக்கத்தின் நிறுவனரும் மற்றும் ஆசார்ய ருமான டாக்டர் இ. ஸ்ரீகுமார் அவர்களால் 'ஸ்ரீஸூக்த புருஸஸூக்த புரஸ்கரண பாராயணம் மற்றும் மஹா யாகம்' ஒன்று திருமலை ஸ்ரீவைகான சாஸ்ரமத்தில் 17-12-97 முதல் 21-12-97 வரை ஐந்து நாட்கள் நடத்தப்பட்டது. இவர் இந்த யாகத்தை 'மேரு' முறைப்படி மிகவும் தரம் வாய்ந்த குங்குமத்தால் அர்ச்சித்து நடத்தினார். இந்நிகழ்ச்சியில் நாட்டின் பல்வேறு பகுதிகளிலிருந்து 108 வேத பண்டிதர்கள் கலந்து கொண்டு சிறப்பித்தனர். இந்த யாகம் நடத்தியதற்கான முக்கிய நோக்கம் பொருளைத் திரட்டி• திருச்சானூரில் உள்ள "நவஜீவன் பிலைண்ட் ரிலீப் சென்டரி"னை வளர்ச்சியுறச் செய்வதற்காகும். அதன்படி ரூ. 5.25 இலட்சம் வசூலிக்கப்பட்டது. அத்தொகையினை "அன்னபூர்ண கூடம்" (சமையல் மற்றும் உணவுக்கூடம்) கட்டுவதற்காக பயன்படுத்தப்படும்.

## நூல் வெளியீடு

3-1-98 அன்று திருச்சானூரில் உள்ள நவஜீவன் ஸப்தகிரி ஆஸ்ரமத்தில் கிடைப்பதற்கரிதான பூர்வமீமாம்சை எனும் சம்ஸ்கிருத நூலான "விதித்ரய பரித்ராணம்" வெளியிடப்பட்டது. இந்நூல் கி.பி. 16ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த புகழ்பெற்ற பண்டிதரான ஸ்ரீமான் வேங்கடாத்வரி அவர்களால் எழுதப்பட்டதாகும்.

பழைய பனை ஓலையில் எழுதப்பட்டிருந்த இந்நூலினை பரிசீலனை செய்து தி.தி. தேவஸ்தான 'புல்லட்டின்' வாயிலாக



விரிவான உரையுடன் அமரர் ஸ்ரீமான். கெ. சடகோபாச்சார்யா 1954ல் வெளியிட்டார். இந்நூலினை மறுபரிசீலனைச் செய்து அத்துடன் ஆங்கில உரையோடு டாக்டர் கெ. அனந்தா அவர்கள் தற்பொழுது வெளியிட்டுள்ளார்.

இந்நிகழ்ச்சியில் தி.தி. தேவஸ்தான முன்னாள் தலைவர் திரு. டாக்டர் சி. அண்ணராவ் அவர்கள், டாகடர் ஆர்.கே. சார்யலு அவர்கள், பேராசிரியர் ஸ்ரீ வட்சாங்காச்சார்யா அவர்கள், தி.தி. தேவஸ்தான ஸப்தகிரி மாத இதழ் ஆசிரியர் என்.எஸ். ராமமூர்த்தி அவர்கள் மற்றும் இதர முக்கிய பிரமுகர்களும் கலந்து கொண்டு சிறப்பித்தனர்.

## இதர செய்திகள்

காஞ்சி காமகோடி பீடாதிபதிகள் ஜகத்குரு ஸ்ரீஜயேந்திர சரஸ்வதி, ஸ்ரீவிஜயேந்திர சரஸ்வதி ஸ்வாமிகள் அண்மையில் திருமலைக்கு வந்திருந்து வேங்கடவனை தரிசித்தனர். அவர்களுக்கு சம்ப்ரதாய முறைப்படி கோயிலில் வரவேற்பு அளிக்கப்பட்டது.

* * *

3-1-98 செவ்வாயன்று திருமலை நித்திய அன்னதான திட்டத்திற்கென ரூ. 5 இலட்சம் நன்கொடையாக திரு. ஜி. பட்டாபிராமய்யா எனும் பக்தர் ஒருவர் வழங்கியுள்ளார்.

* * *

அண்மையில் திருமலை திருவேங்கடத்தானுகு பெயர் குறிப்பிடாத பக்தர் ஒருவர் தங்கலக்ஷ்மி காசு மாலையை காணிக்கையாக சமர்ப்பித்துள்ளார். இதன் மதிப்பு சுமார் 5 இலட்சம் ரூபாய் ஆகும். இவ்அணிகலனை அவர் உண்டியில் செலுத்தி இருந்தார் என்பது குறிப்பிடத்தக்கது.

* * *

திருப்பதியில் உள்ள தி.தி. தேவஸ்தான எஸ்.வி. உயர்நிலைப்பள்ளியில் தலைமையாசிரியராக பணிபுரியும் திரு. எம். புருஷோத்தம ரெட்டி அவர்களுக்கு ஆந்திர மாநில அரசின் நல்லாசிரியர் விருது வழங்கப்பட்டுள்ளது. இவ்விருதினை அவர் மாநில அமைச்சர் திரு. பி. கோபால கிருஷ்ண அவர்களிடமிருந்து பெற்றுக்கொண்டார்.

* * *

# ஆந்திராவின் ஆன்மீக கவி அன்னமாச்சாரியா

திருமதி. என். லக்ஷ்மி ஐயர் - கோவை.

இந்து மதத்தின் இரு கணகளாக விளங்கும் சமய நெறி சைவமும் வைணவமும். சைவம் சிவநெறியின் புகழைப் பாடுவது. வைணவம் திருமாலின் புகழைப்பாடுவது. வைணவ நெறிகளில் உள்ள கொள்கைகள் அனைத்து மக்களுக்கும் பொதுவானதே. தென் இந்தியாவில் பரவிய பக்திநெறிகளின் தாக்கம் வட இந்தியாவிலும் ஏற்பட்டு அங்குள்ள புலவர்களையும் பக்தி நெறிக்கு அழைத்துச் சென்றது. திராவிட மொழிகளில் 'சுந்தர தெலுங்கு' என்று தெலுங்கினைப் புகழ்கின்றான் பாரதி. திராவிட மொழிகள் குடும்பத்தில் முக்கியமாகக் கருதப்படும் சுந்தரத் தெலுங்கினில் தெய்வீகக் கவிஞர்களாக விளங்கியவர்கள் அன்னமாச்சார்யா, க்ஷேத்ரஞ்யா, ராமதாஸர், தியாகராஜர் போன்றவர்கள். வைணவ நெறிகளில் த்வைதம், அத்வைதம், விசிஷ்டாத்வைதம், சுத்தாத்வைதம் என்ற நான்கு நெறிகள் வைதீகக் காலத்தில் இருந்தே பின்பற்றுவந்தன. இருப்பினும் கி.பி. 1400ல் இருந்து பக்தி நெறி அதிகமாக பரவ ஆரம்பித்தது. இப்பக்தி காலத்தில் 'கவித்ரயங்கள்' (நனனயபட்டர், திக்கண்ணு, எர்ரப்ரகடா) என்று அழைககப்பட்ட இவர்களால் படைக்கப்பட்ட மகாபாரதத்தின் மூலமாக கிருஷ்ணனின் சமயக் கொள்கை தெலுங்கு மொழியில் பிரபலமானது.



தெய்வீக நிலையில், இராம நெறியில் நிற்கின்ற ராமபத்ர கவிகள் "இராமனை மரியாதைப் புருஷனாகவும், உலகத்தைக் காப்பவனாகவும்" (உலக ரட்சகன்) ஏற்றுக்கொள்ளப்பட்டு பாடி வழிபட்டு வந்தனர். கிருஷ்ண நெறியில் நிற்கின்ற கவிகள் கிருஷணனை உயர்ந்த தெய்வீக நிலையில் மட்டுமல்லாமல், தோழனாக, காதலனாக, குழந்தையாக, லீலைகள் புரிபவனாக (உலக ரட்சகன் லீலாகாரி) என பல நிலைகளில் உருவகித்து பாடி வழிபட்டு வந்தனர்.

தெலுங்கு இலக்கிய உலகில் 16ஆம் நூற்றுண்டில் வாழ்ந்த கவிகள் பெரும்பாலும் பாக்களைப் பாடுவதில் வல்லவராகத் திகழ்ந்தார்கள். இக்கவிஞர்கள், 'வாக்யேக்காரர்கள்' என அழைக்கப்பட்டனர். முதல் உத்தம வாக்யேயராக வணங்கியவர் 'அன்னமாச்சார்யா'.

'பதக் கவிதை' பாட்டுடன் கூடிய இலக்கியம் இசையும் இலக்கியமும் இணைந்தது. பதக்கவிதை பின்னர் 'கீர்த்தனை, கிருதி' என இரு நிலைகளில் பிரிந்தது.

Statement about ownership and other particulars about

**SAPTHAGIRI**

(MONTHLY)

FORM IV

*See Rule 8*

| | | | |
|---|---|---|---|
| 1. | Place of Publication | : | TIRUPATI |
| 2. | Periodicity of its Publication | : | Monthly |
| 3. | Honorary Editor | : | Sri M.K.R. Vinayak, I.A.S., Executive Officer, T.T.D. |
| 4. | Printer's Name | : | M. Lakshmana Rao, B.A., L.P.T. |
| | Whether citizen of India | : | Yes |
| | Address | : | Manager, T.T.D. Press, Tirupati |
| 5. | Editor & Publisher's Name | : | N.S. Ramamurthy, M.A. |
| | Whether citizen of India | : | Yes |
| | Address | : | Editor, Sapthagiri T.T.D. Journal, Tirupati |
| 6. | Name and address of individuals who own the Newspaper and partners or shareholders holding more than one percent of the Total Capital | : | Board of Trustees represented by the Executive Officer on behalf of T.T.D., Tirupati |

*I, N.S. Ramamurthy, hereby declare that the particulars given above are true to the best of my knowledge and belief.*

TIRUPATI
Date : 28-2-1998

(Sd.) N.S. RAMAMURTHY
*Signature of the Publisher*


**பதக்கவிதை:**

பதக் கவிதை என்பது இசை அதிகமாக இலக்கிய நயம் குறைந்து, சிருங்காரரசம் மிகுந்தும் காணப்படும், 'சிருங்கார ரசம்' பதக் கவிதையில் அதிகமாகக் காணப்படுவது அதனுடைய சிறப்பாகும். கலியுக வைகுண்டமான திருமலை திருப்பதி மலையில் எழுந்தருளியிருக்கும் ஸ்ரீவெங்கடேஸ்வர பெருமானின் மீது ஆயிரக்கணக்கில் பதக்கவிதை எழுதியுள்ளனர். முதன்முதலில் இவ்வார்த்தை பக்தி ரசம் பொருந்திய பக்தி பாடலை குறிப்பிட உபயோகப்பட்டுவந்தது. பக்தி உலகில் நாயக, நாயகி பாவனை பெரிதும் இடம் பெற்றதால் சிருங்கார ரசம் மிகுதியாக பாடல்களில் இடம் பெற்றது. புரந்தர தாசருடைய பதங்கள், முத்துத் தாண்டவருடைய பதங்கள, அன்னமாச்சார்யா பதங்கள் என விளங்கி வந்தன.

இந்திய சங்கீதத்தில் பக்தி ரஸம் பொருந்திய உருப்படிகள் எவ்வளவு இருக்கின்றனவோ அவ்வளவு ச்ருங்கார ரஸ உருப்படிகளும் இருக்கின்றன. இந்திய வாக்யேக்காரர்கள் தங்களது பக்திப்பெருக்கையும், உணர்ச்சிகளையும், ச்ருங்காரம் பக்தி இவ்விரண்டு ரசங்கள் மூலமாகத் தெளிவாக வெளியிட்டுள்ளாரகள். பதங்களில் நாயகர்கள் பாடும் பதங்கள், நாயகிகள் பாடும் பதங்கள், சசிகள் பாடும் பதங்கள் என மூன்று வகைகள் உண்டு.

கீர்த்தனைகளும் பக்தி ரசத்தை உடையது தான். ஆனால் இறைவனை புகழ்ச்சியின் மூலம் பாடியுள்ளார்கள. காதல் மூலம் இறைவனை அடையும வழியினை சித்தரிப்பதே பதங்கள்.

அன்னமாச்சாரியார் பாடியுள்ளதாக திருப்பதியில் உள்ள குகைகளிலும், செப்பேடுகளிலும் ஏறத்தாழ 12000 பதிகங்கள் கிடைத்துள்ளன. அன்னமாச்சார்யாவின் பாடல்களை இரண்டு பொதுவான பிரிவுகளாகப் பிரிக்கலாம். காதல் பாடல்கள், ஆன்மீகப் பாடல்கள். திருமாலை நாயகனாகவும், பத்மாவதி (அலர்மேல் மங்கைத்தாயாரை) நாயகியாகவும் பாவிதது ச்ருங்கார ரசத்துடன் கூடிய நாயக நாயகிப் பாடல்கள் பலப் பாடியுள்ளார். இவருடைய பதிகங்கள் இனிமையாகவும் எளிமையாகவும், மனஙகவர்ந்ததாகவும் இருக்கும்.

**பக்தி நெறி:**

திருமாலைப் பற்றிப் பாடியதோடு மட்டுமல்லாமல் கிருஷ்ணனைக் குறித்தும் பாலகிருஷ்ணனுடைய லீலைகளைக் குறித்தும் அதிகமாகப் பாடியுள்ளார். மகாபாகவதத்தில் வருணிக்கப்பட்டுள்ள நவதாபக்தி (நவபக்தி) முழுவதும் அன்னமாச்சாரியருடைய பதங்களில் காணலாம்.

"சிரவணம், கீர்த்தனம் விஷ்ணு:க
ஸ்மரணம் பாதசேவனம்
அர்ச்சனம், வந்தனம் தாஸ்யம்
சாக்யமாத்ம நிவேதனம்"

இறைவனுடைய பெருமைகளை காதால் கேட்பதும் அவனது பெருமைகளை,

நாமத்தை உச்சரிப்பதும், அவனுடைய பாதங்களை வணங்குவதும், அர்ச்சிப்பதுவும், கைகுவித்து வணங்குவதுவும், நாம் அடிமையாக இருப்பதும், ஆண்டவனாகிய இறைவனை தோழனாக வைத்து ஆத்மபூர்வமாக வழிபடுகின்ற நிலையினைக் கூறுவதே நவபக்தி மார்க்கமாகவும். இறைவனை நினைத்து, தன்னை மறந்த நிலையில் பாடிய பக்தி பனுவலே பக்தி இலக்கியங்களில் முக்கிய இடத்தினை வகித்தது.

### அன்னமாச்சாரியாருக்கு அன்னை அருள்புரிதல்:

முதன் முதலில் மலையில் எழுந்தருளி இருக்கும் திருமாலை தரிசிப்பதோடு வேங்கடமலையில் ஏறிச்செல்லுகின்றார். செல்லும் வழியில் மயக்கமுற்று விழுகின்றார்.

அச்சமயம் அலர்மேல்மங்கையின் அன்னையான ஜகத்ஜனனி கையில் பாயசத்துடன் அவர் முன் தோன்றி மயக்கத்தை தெளிவித்து செய்த தவற்றினை சுட்டிக்காட்டுகின்றாள். புண்ணிய மலையான திருவேங்கடத்தில் காலில் பாதுகை அணிந்து வருதல் தவறு என்பதனை உணர்த்தி மறைகின்றாள். அன்னமாச்சாரியாரும் அதன்பின் பாதுகைகளை எறிந்துவிட்டு மலையேறிச் செல்லுகின்றார். முதன்முறையாகத் திருமலையைக் கண்டவுடன் பக்தி பரவசத்தில்,

"அதிவோ அல்லதிவோ
ஹரி வாசமு
பதிவேலு சேஷுல படகலமயமு
(அதிவோ)
அதெ வேங்கடாசலம்
அகிலோன்னதமு
அதிவோ ப்ரம்மாதுல கபுரூபமு
அதிவோ நித்ய நிவாஸமு
அகிலமுனுலகு
அதெ சூடு மொக்குடு
ஆனந்தமயமு (அதிவோ)"

எனும் இப்பதிகத்தை எழுதியுள்ளார்.

### திருமலையின் சிறப்பு :

பத்தாயிரம் தலைக்கொண்டுள்ள ஆதிசேடநாகத்தின் மேல் பளளி கொண்டிருக்கும் திருமால் எழுந்து அருள் புரியும் திருவேங்கடமலை, உலகத்தில் உள்ள மலைகளில் எல்லாம் உயர்வான மலை, உலகத்தில் உள்ள முனிவர்கள் விரும்பி உறைகின்ற மலை, இம்மலை. ப்ரம்ம தேவர்களுக்கு எல்லாம் அபூர்வமான மலை. மக்களுக்கு ஆனந்தத்தை அள்ளித் தருகின்ற இந்த மலைக்கு வாருங்கள். வணங்குங்கள்.

வானுலகில் வாழும் தேவர்கள், மண்ணுலகில் விரும்பி உறைகின்ற மலை திருவேங்கடமலை. உலகத்தில் உள்ள செல்வங்கள் எல்லாம் குவிந்திருக்கின்ற பொன்மலை இம்மலை பக்தர்களுடைய பாவங்களைப் போக்கி, மோட்சத்தை தருகின்ற மலை திருவேங்கடமலையே! என திருவேங்கடமலையின் சிறப்பினை அழகாகக் கூறியுள்ளார்.

திருவேங்கடமலையின் சிறப்பினைப் பாடிய இந்த கவி இம்மலையில் உறையும் இறைவன் பக்தர்களுக்கு அருளை வழங்குவதிலும் தனக்கு நிகரில்லாமல் உயர்ந்து விளங்குபவர் என்கிறார்.

"கொண்டலலோ நெலகொன்ன
கோனேடி ராயடு
கொண்டலந்த வரமுலு
குப் பெடுவாடு"

மலைபோல எழுந்திருக்கும் இறைவன் பக்தர்களுக்கு மலைபோல அருளை வாரி வாரி வழங்குவதிலும் வல்லவன்.

### பொதுமை நெறி:

இறைவனை வணங்குவதற்கு சாதி மதபேதம் கிடையாது. அண்டசராசரங்களில் உள்ள ப்ரம்ம தத்வம் ஒன்றே. தத்வம் வணங்குதற்குரியது. பிரம்மம் ஒன்றே என பொது நெறியைக் கூறும் புலவர். சிலநடைமுறை வாழ்க்கை நிகழ்வுகளை மக்கள் உணரும் வகையில் எடுத்து இயம்பியுள்ளார்.

ராஜாவானாலும், சேவகனானாலும் தூங்குகின்ற தூக்கம் பொதுவானது தான். ராஜா பஞ்சணையில் படுத்தாலும் சேவகன் தரையில் படுத்தாலும் உறங்குகின்ற உறக்கம் ஒன்றே.

மறைஓதும் அந்தணனும், உடலை எரிக்கின்ற தொழில் புரிபவனும் (சண்டாளன், வெட்டியான்) நிற்கின்ற நிலம் ஒன்றே.

உலகில் உள்ள எல்லா ஜீவராசிகளிலும் நிறைந்திருப்பவன் ஹரி ஒருவனே.

"பிரம்மம் ஒகட்டே பரபிரம்மம்
ஒகட்டே
தந்தனான ஆகி, தந்தனானாபல
தந்தனான ஆகி பல தந்தனானா"

எனும் இபபாடல நாடோடிப் பாடல் மெட்டில் அமைந்துள்ளது. எல்லா நிலையினை மக்களும் சென்று அடையும் வகையில் எளிமையான இனிமையான நாடோடிப்பாடல்களையும் பாடியுள்ளார்.

### பாதாதிகேச வருணனை:

திருமலையில் எழுந்தருளி இருக்கும் இறைவனை விஷ

ணுவின் அவதாரமாக எடுத்துக்கொண்டு, அவ்விறைவனை பாதாதி கேசம் வரை ஒவ்வொரு அங்கமாக வருணித்துள்ளார்.

### பாதத்தின் அழகை வருணிக்கின்றூர் :

"பிரம்ம கடிகின பாதமு பிரம்மமூ
தானெனி பாதமு
செலதி வஸுத கொலுசின நீ பாதமு
பலிதல மோபின பாதமு
தலகக ககனமு தன்னின பாதமு
பலரிபு காசின பாதமு
(பிரம்ம)
காமினி பாபமு கடிகின பாதமு
பாமு தலநிடின பாதமு
பிரேமபு ஸ்ரீசதி பிசிகேடி பாதமு
பாமிடி துரகபு பாதமு
(பிரம்ம)
பரமயோகுலகு பரிபரி விதமுல
வரமொசகடி நீ பாதமு
திருவேங்கடகிரி திரமனி சூபின
பரமபதமு நீ பாதமு (பிரம்ம)
-(அன்னமாச்சார்ய கீர்த்தனை)

உலகத்தை படைத்த பிரம்மனால் கழுவப்பட்ட பாதம் இது. பிரம்மனால் கழுவப்பட்ட பாதம் ஆனதால் இறைவனே பிரம்மனாகிறுன். பிரம்மாவினுடைய கர்வத்தினை அடக்கி பிரம்மனாகிறுன். (கிருஷ்ணுவதாரம்)

பூதேவியினால் பூஜிக்கப்படுகின்ற பாதமிது. மாபலி சக்கரவர்த்தியின் தலைமீது வைக்கப்பட்ட பாதமிது. ஆகாயத்தையே அளந்தபாதமிது. (வாமன அவதாரம்)

காமி (அகலிகை)யின் பாவத்தை நீக்கி விமோசனம் தந்த பாதமிது (ராமாவதாரம்) காளிங்க நர்த்தனம் செய்த பாதம் உன்னுடையது. (கிருஷ்ணுவதாரம்) திருமகளினால் அன்புடன் சேவிக்கப்பட்ட பாதமிது.

உன்னை பலவேறு நிலைகளில் வழிபடுகின்ற முனிவர்களுக்கு வரமளிக்கின்ற பாதம் இது. திருவேங்கடமலையில் ஸ்திரமாக உறைந்திருக்கின்ற புண்ணியப்பாதமிது.

இவ்வாறு இறைவனின் பாதப்பெருமையினை எடுதது ரைக்கின்றூர்.

### கமலககையான் :

வேங்கட மலையினை அடைந்து இறைவனை தரிசித்து மெய் மறந்து, நிற்கின்ற நேரத்தில் இறைவன் அவருக்கு அருள்பாலிக்கின்றூர். கமலம் போன்ற கையினைப் பார்த்து பதிகத்தை பாடுகின்றூர்.

"இந்தரிகி அபயம்புலு இச்சுசேயி
கந்து வகு மஞ்சி பங்காரு செயி"

எனககு மட்டுமல்ல எத்தனையோ கோடி மக்களுக்கு உன்னுடைய பொற்கரங்கள் அபயம் அளித்துள்ளது என்று உணர்ச்சி வெள்ளத்தில் பாடியுள்ளார்.

### அன்னமாச்சாரியாரின் வாழ்க்கை :

அன்னமாச்சாரியார் ராமானுஜரால் தொடங்கப்பட்ட வசிஷ்டாத்வைதத்தை, தீட்சித் பெற்று பின்பற்றியுள்ளார். அஹோபிலம் என்ற ஊரில் ஆதிவண் சடகோபதி எத்தேந்திர என்பரிடம் இருந்து குரு உபதேசம் பெற்று, பின்பு தன்னுடைய சொந்தஊரான தாளப்பாக்கம் திரும்பிவிட்டார்.

சொந்த ஊருககுத் திரும்பியவுடன், திருமலம்மா, அக்காலம்மா என்ற இரு பெண்களைத் திருமணம் செய்து கொண்டார். திருமணமான பின்பும் பதிகங்களைத் தொடர்ந்து பாடி, இறைவனுடைய புகழை பரப்பிக் கொண்டே இருந்தார்.

### அற்புத நிகழ்ச்சிகள் :

இறைவனுடைய அருளால் பல அற்புத நிகழ்ச்சிகளைச் செய்யும் ஆற்றல் உடையவராக விளங்கினார். இவருடைய பக்திப் பாடல்களில் மூழ்கி, அதில் ஈடுபாடு உடையவரானார் மன்னர் சாளுவ நரஸிம்ஹ ராயா. அன்னமாச்சார்யா இருப்பதற்கு இருப்பிடம் கொடுத்து ஆதரித்து வந்தார். சில நாட்கள் சென்றபின், மன்னன் இவரிடம் தன்னைப் புகழ்ந்து பாடுமாறு கேட்டுக்கொள்கிறுன். இறைவனைப் பாடிய வாயால் மன்னனைப் புகழ்ந்து பாட மறுக்கின்றூர். இவர் மீது கோபமுற்ற மன்னன் புலவனுடைய கையில் விலங்கிட்டு தண்டிக்கின்றுர. பக்த கவியான இவர், இறைவனை நினைந்து பதிகம் பாடிய உடன் கைவிலங்கு விலகி விடுகிறது. இதுமட்டுமல்லால் இவை போன்ற வேறு அற்புத நிகழ்ச்சிகளையும் தன்னுடைய வாழ்ககையில் நடத்தியதாக கதைகள் உள்ளன.

### இறைவின் மீது கொண்டுள்ள அன்பு :

நாயக நாயகி செயல்களைச் ச்ருங்கார சுவையுடன் பாடுவதில் வல்லவரான அன்னமாச்சார்யா, இறைவி பல்லக்கில் செல்லும்போது, பல்லக்கைத் தூக்கிச செல்லும் பெண்கள் எவ்வாறு செல்லுதல வேண்டும் என்று ஓசை இன்பத்துடன் நயமாகக் கூறுகின்றூர்.

"குலுகக நடவரோ கொம்ம லாரா
ஜலஜல ராலேனு ஜாஜுலு
மா அம்மகு (குலுகக)

அலர்மேல் நங்கையைத் தூக்கிக்கொண்டு செல்லுகின்ற சேடிப்பெண்களே. அவள் போய் சேரப்போகின்ற நாய

கன் திருமலையான். எனவே அவளை அலுங்காமல், குலுங்காமல் வேங்கடமலை கொண்டு செல்லுங்கள் என் அன்புடன் வேண்டுவதை உணரமுடிகிறது.

### குழந்தையாக பாவித்தல்:

இறைவனைக் குழந்தையாகப் பாவித்து யசோதையின் மூலமாக தன்னுடைய அன்பினை வெளிப்படுத்துகின்றார்.

வாத்ஸல்ய ரசமாகக் கருதப்படும் இதனை வடமொழியில் பத்தாவது ரசமாகக் கூறியுள்ளார்.

"ஜோ அச்சுதானந்தா ஜோஜோ
முகுந்தா
ராவெ பரமானந்தா ராம
கோவிந்தா ஜோ ஜோ"

அச்சுதா, முகுந்தா தூங்குவாயாக. பாற்கடலில் பள்ளி கொள்ளும் பெருமாளே. இன்று வசுதேவனின் வீட்டில கிருஷ்ணனாக அவதரித்தவனே. தூங்குவாயாக. பாலகனே தூங்குவாயாக, பாலகனே கோபியர்கள் உன்னைத் திருடன், கள்வன் என்று ஏசினாலும் நீ என்முன் ஆடுவாயாக என நினைத்து நினைத்து சுவைக்கும் வகையில் பாடியுள்ளார்.

### நாடோடிப்பாடல்கள் :

தன்னுடைய செய்தி அரசனுக்கும், சாதாரண மனிதனுக்கும் அறிவாளிக்கும், படிப்பறிவில்லாதோனுக்கும் சென்று அடைய வேண்டும் என்பதை உணர்ந்து, பண்டைய மரபின் வழிவந்த இலக்கணக் கட்டுக் கோப்பான பாடலிலிருந்து, இலக்கணக்கட்டுக்கோப்பு குறைவான, அசைந்து நெளிந்தாடும் நாடோடிப்பாடல்களின் அடிப்படையில் அமைந்த பாடல்களவரை எல்லாவிதமான பாடல்களையும் பாடியுள்ளார். பெள்ளி பாடலு (கல்யாணப் பாடல்கள்), உய்யால பாடலு (ஊஞ்சல் பாடல்கள்) ஜோலப்பாடலு (தாலாட்டுப் பாடல்கள்) போன்ற பாடல்கள் இவருடைய கிராமியப் பாடல்களில் புகழ் பெற்றவை ஆகும்.

### நாடகமே வாழ்க்கை :

இவருடைய புகழைப்பாடும் பக்தி கவிகளில் நிலையாமையை உணர்த்தும் தத்துவக் கருத்துக்களும் பொதிந்துள்ளன. ஆதி அந்தமில்லாதவன், அசுரர்களை அழித்தவனாகிய நம்முடைய திருவேங்கடமுடையான் எங்கும் நிறைந்திருப்பவன். சகல பிரம்மாண்டத்திலும், எல்லா மந்திரங்களிலும், செயல்களிலும் வேதங்களிலும் நிரம்பி இருப்பவன் இத்தகைய ஹரியினுடைய நாமத்தை எப்போதும் சொல்லிக்கொண்டே இருப்பதினால் நிலையாமை உடைய வாழ்க்கையில் உயர்ந்த லட்சியத்தினை அடையலாம் என்கிறார்.

உலகத்தின் நிலையாமையைக் குறித்த புகழ்பெற்ற பாடல்

"நானாடி ப்ரதுகு நாடகமு
கானக கன்னதி கைவல்யமு"

ஒவ்வொரு நாள் வாழ்க்கையும் நாடகம் போன்றது. நாடகமாகிய வாழ்க்கையில் கிடைக்க வேண்டியது மோட்சம். மோட்சத்தை அடைவதற்கு வழி ஹரியின் நாமத்தை போற்றுவதாகும். ஹரியின் நாமத்தை உச்சரிப்பதே நாடக வாழ்க்கையில் நன்மை பயப்பதாகும்.

### நூல் பயன்

அறம், பொருள், இன்பம் முதலிய கருத்துக்களைக்கூறி, வீடு பேறறினை அடையச செய்வதே நூலின் பயனாகும். இவருடைய கவிகளை உள்ளன் போடு நினைத்து பாடுபவர்களுக்கு, என் அப்பன் திருவேங்கடமுடையான், துன்பத்தினை நீக்கி, செலவத்தினைக் குவித்து, அருள்புரிவானாக என்கிறார். இன்றும் திருமால் செல்வமுடையவனாக, வழிபட

---

## குத்துவிளக்கின் தத்துவம்

| | |
|---|---|
| விளக்கின் அடிப்பாதம் | - சரஸ்வதிபிரம்மம் அம்சம் |
| நடுதண்டுப்பகுதி | - லட்சுமிநாராயண அம்சம் |
| நெய்தங்கும் பகுதி | - பார்வதி பரமேஸ்வர அம்சம் |
| மேல்நோக்கி நீண்டபகுதி | - மகேஸ்வர அம்சம் |
| சிகரம் | - சதாசிவ அம்சம் |
| நெய் | - நாதம் |
| திரி | - பிந்து |
| சுடர் | - திருமகள் |
| ஒளிப்பிழம்பு | - கலைமகள |
| நெருப்பு | - சக்தி, மலைமகள் |

திருவிளக்கு வழிபாடு எல்லா நலனும் தரும் சிறப்பாகும்.

தகவல்: திரு. டி. பூபதிராவ் - சென்னை.

---

வரும் பகதர்களையும், அந்நிலையில் வைத்திருப்பவன் என்னும் நம்பிக்கை இந்தியா முழுவதும் நிலவிவருகிறது.

அன்னமாச்சார்யா மிக முதிர்ந்த வயது வரை வாழ்ந்தவர். தன் வாழ்க்கை முழுவதையும் திருவேங்கடத்தானுக்கே அர்ப்பணித்துள்ளார். இலக்கியத்திற்கு அன்னமாச்சார்யாவின் தொண்டு எவ்வாறு அளவிடற்கரியதோ, அவ்வாறே தெலுங்கு மொழியில் அவர் இயற்றியவை அளவிடற்கரியது. சங்கீத தெலுங்கு மொழியில் அவர் இயற்றியவை அளவிடற்கரியது. சங்கீத உலகில் இன்னும் அன்னமாச்சாரியாவின் பாடல்களில் ஏதாவது ஒருபாடல் இடம் பெற்றிருப்பதன் மூலம் அவருடைய பாடல் இந்தியா முழுவதும மொழி வேறுபாடின்றி பாடப் படுகின்றன. 'தெய்வீகக் கவியின்' கீர்த்தனைகளைக் கேட்டு மகிழ்ந்து தெலுங்கு உலகம் 'பதக்கவிதா பிதா மகன்' (பதக் கவிதையின் தாத்தா) என்ற பட்டத்தை வழங்கி கௌரவித்தது பெருமைக்குரியதாகும்.

தமிழ் இலக்கிய நூலில் வேங்கடமலையினைப் பற்றிய செய்தி பழமையான இலக்கண நூலான தொல்காப்பியம், காப்பிய நூலான சிலப்பதிகாரம், சங்க இலக்கியப் பாடல்கள் இவற்றில் காணப்படுகின்றன. மலையினை மட்டும் இலக்கியங்களின் மூலம் அறிந்த நாம் அம்மலையில் எழுந்தருளியிருக்கும் ஸ்ரீவேங்கடேசப் பெருமானின் புகழை, அன்னமாச்சார்யாவின் பக்திப் பாடல்கள் மூலம் சுவைத்து இன்புறமுடிகிறது.

உலகில் உள்ள அனைவரும் வேங்கடத்தானின் பெருமைகளை அறியும் வகையிலும் மக்களுடைய உள்ளங்களைத் தொடும் வகையிலும் பக்திக கவிகளைப் பாடிய அன்னமாச்சார்யாவை ஆந்திராவின் 'ஆன்மீகக் கவி' என்று கருதுவதில் ஐயமில்லை.



# திருமலைக்கு நடந்து வரும் யாத்திரிகர்களுக்கான வசதிகள்

**தங்களுடைய வேண்டுதல்களில் ஒன்றாக பலர் திருமலைக்கு நடந்து வருகின்றனர். தி.தி. தேவஸ்தானம் அவர்களுக்காகக் கீழ்வரும் வசதிகள் செய்து உள்ளது.**

- **யாத்திரிகர்களின் சாமான்கள் இலவசமாக திருப்பதியிலிருந்து திருமலைக்கு எடுத்துச் செல்லப்படும். திருப்பதியிலுள்ள தி.தி. தேவஸ்தான சத்திரங்களில் ஏதாவது ஒன்றில் அல்லது அலிபிரி சாவடியில் (டோல்கேட்) தங்கள் சாமான்களை ஒப்படைத்து, அங்குத் தரப்படும் தங்கள் சாமான்களுக்கான டோக்கனை திருமலையில் 'மத்திய வரவேற்பு நிலையத்தில் காட்டுவார்களாயின், அங்கு அவர்களுடைய சாமான்கள் அவர்களுக்கு ஒப்படைக்கப்படும்.**
- **காளி கோபுரம், சித்தியேகாடு, மாமண்டூரு மிட்டா, நரசிம்மசுவாமி கோயில், மோகால மிட்டா மற்றும் பல இடங்களில் யாத்திரிகர்கள் சமையல் செய்துகொள்ள வசதிகள் உள்ளன.**
- **நடைபாதையின் 7வது மைலில் மாமண்டூரு மிட்டாவில் தாங்களே முன்வந்து நடத்தும் 'இஸ்கான்' எனும் தனியார் அமைப்பு நடத்தும் உணவு விடுதியில் சுகாதாரமான உணவு வகைகள் கிடைக்கும்.**
- **மறைவிடங்கள் உள்ளன. ஓய்வு எடுத்துக்கொள்ள முக்கியமான இடங்களில் நிழற்குடைகள் உள்ளன.**
- **திருமலைக்குச் செல்லும் வழியில் யாத்திரிகர்களை களவு, ஏமாற்றுதல் போன்றவற்றிலிருந்து பாதுகாக்கும் பொருட்டு வழிநெடுகிலும் காவல்துறை, கூர்க்கா, பாதுகாப்புத்துறை ஆகியோரைச் சார்ந்த பகல் இரவு நேர ரோந்து ஏற்பாடுகள் உண்டு.**

# குலசேகராழ்வாரும் பெருமாள்திருமொழியும்

திரு. V. மணிசங்கர் - ஆரணி.

பக்திச்சுவைமிக்க இலக்கியங்களை வைணவ சமயத்தைச் சார்ந்த ஆழ்வார்கள் உருவாக்கினர். வைணவ சமயத்தை மக்களிடையே பரப்புவதற்காகத் தமிழை ஒரு கருவியாகக் கொண்டனர். பக்தியால் செந்தமிழ் வளர்ந்தது. செந்தமிழால் பக்தி இயக்கமும் பக்தியும் வளர்ந்தன. தேனினும் இனிய இசைப்பாடல்கள் தமிழ்மொழிக்குக் கிடைத்தன. திருவாய் மொழி, திருப்பல்லாண்டு போன்ற இசைப்பாடல்களை வைணவ ஆழ்வார்கள் யாத்தனர். அவர்கள் பாடிய பாடல்களை நாலாயிரத்திவ்யப் பிரபந்தம் எனத் தொகுத்து வைத்தனர். வைணவ சமயத்தை மக்களிடையே பரப்பப் பக்திப்பாடல்களைக் கையாண்டனர். திருமாலின் சிறப்பையும் திருமாலின் அருளையும் பெற வழிகாட்டும் பாடல்களையும் திருமால் அடியார்கள் உளமுருகப்பாடினர். இவர்களுள் தலைசிறந்தவர்கள் பன்னிரு ஆழ்வார்கள் எனப்போற்றிப் புகழப்பட்டனர். இவர்கள் திருமால் எழுந்தருளியுள்ள வைணவத்திருத்தலங்களுக்கெல்லாம் வாகன வசதியற்ற அந்நாட்களில் கால்நடையாகவே பயணம் மேற்கொண்டு இறைவனை இசைத் தமிழால் வழிபட்டனர். இப்பாடல்களைத் தொகுத்து நாலாயிரத் திவ்யப்பிரபந்தம் எனப்பெயர் சூட்டினர். மொத்தத்தில் நாலாயிரம் பாடல்கள் உள. பன்னிரு ஆழ்வார்களுள் பொய்கை ஆழ்வார், பூதத்தாழ்வார், பேயாழ்வார் போன்றோர் முதல் மூன்று ஆழ்வார்கள் எனப் போற்றப் பட்டனர். இவர்கள் பாடிய பாடல்கள் முதல் திருவந்தாதி, இரண்டாம் திருவந்தாதி, மூன்றும் திருவந்தாதி எனப் பட்டன. பெரியாழ்வார் கண்ணபிரானைக் குழந்தையாகக் கருதிப் பாடினார். திருவில்லிபுத்தூரில் பிறந்து வளர்ந்த ஆண்டாள் நாச்சியார் திருமொழி, திருப்பாவைப் பாடல்களைப் பாடியுள்ளார். நம்மாழ்வாரின் திருவாய்மொழி நான்கு வேதங்களின் (ருக், யஜுர், சாமம்,அதர்வணம்) சாரமாகக் கருதப்படுகிறது.

இவர் பாடிய பெருமாள்திருமொழி உள்ளத்தை உருக்குவதாகும். இவர் அரச பதவியை வெறுத்துத்துறந்து, அடியாராகியவர். 'தயரதன் புலம்பல்', 'தேவகி புலம்பல்' என்னும் பாடல்கள் குலசேகர ஆழ்வாரின் தாயுள்ளத்தை வெளிக்காட்டுவன. இவருடைய திருமால் பக்தி ஈடுஇணையற்ற ஒன்றாகும். திருவேங்கடமலையில் கோயில் கொண்டுள்ள திருவேங்கடவன் மீது பாடிய பாடல்கள் குலசேகர ஆழ்வாருடைய பக்திச் சிறப்பை நன்கு வெளிப்படுத்துவனவாகும்.

### குலசேகர ஆழ்வாரின் பெருமாள் திருமொழி

### திருவேங்கடமலையில் மீனாகப் பிறக்கவேண்டுதல்

"ஆனாத செல்வத்தரம்பையர்கள் தற்சூழ
வானாளும் செல்வமும்
மண்ணரசும் யான் வேண்டேன்



தேனார் பூஞ்சோலைத்
திருவேங்கடச் சுனையில்
மீனாய்ப் பிறக்கும்
விதியுடையேனாவேனே"

தேவமகளிர் சூழ்ந்திருந்து சிறப்புச் செய்யும் மிகுந்த செல்வ வாழ்க்கையும், மண்ணுலக ஆட்சியும், விண்ணுலக ஆட்சியும் தேவையற்றவை. தேன் நிறைந்துள்ள மலர்ச் சோலைகளால் சூழப்பட்டுள்ள திருவேங்கடமலையின் கண்ணுள்ள சுனையில் மீனாய்ப்பிறந்தாலே போதுமானது என்கிறார் குலசேகர ஆழ்வார்.

## தூணாய் இருத்தல்வேண்டும்

"கம்ப மதயானைக் கழுத்தகத்தின்
மேலிருந்து
இன்பமரும் செல்வமிவ் வரசும்
யான் வேண்டேன்
எம்பெருமான் ஈசன் எழில்
வேங்கடமலைமேல்
தம்பமாய் நிற்கும்
தவமுடையேனாவேனே"

யானையின் மீது பவனி வருகின்ற செல்வ வாழ்க்கையோ, அரச வாழ்வோ தனக்குத் தேவையற்றவை. திருமால் எழுந்தருளியுள்ள திருவேங்கடமலையின் மேல் தூணாய் நிற்கும் நல்வாய்ப்புக் கிடைத்தாலே போதுமானது என வேண்டுகிறார் குலசேகராழ்வார்.

## திருவேங்கடமலைமீது காட்டாறாகப் பாயவேண்டுதல்

வானாளும் மாமதிபோல் வெங்-
குடைக்கீழ் மன்னவர்தம்
கோனாகி வீற்றிருந்து
கொண்டாடும் செல்வறியேன்
தேனார் பூஞ்சோலைத்
திருவேங்கடமலை மேல்
கானாறாய்ப் பாயும்
கருத்துடையேனாவேனே.

வானத்தைத் தன் தண்மையான ஆட்சியால் ஆளும் நிலவைப் போல வெண்கொற்றக் குடைக்கீழ் வீற்றிருந்து பேரரசனாய் இம் மண்ணுலகை ஆட்சி செய்ய விரும்புகின்றவன் அல்லன். பூங்காக்களால் சூழப்பட்டுள்ள திருவேங்கடமலையின் கண் காட்டாறாகப் பாய்ந்து திருமாலைக் கண்டு கொண்டு இருப்பதற்காகவே குலசேகர ஆழ்வார் விரும்புகிறார்.

## திருவேங்கடமலையில் படியாய்க்கிடக்க வேண்டுதல்

செடியாய வல்வினைகள்
தீர்க்கும் திருமாலே
நெடியோனே! வேங்கடவா!
தீர்க்கும் திருமாலே
அடியாரும் வானவருமரம்பையரும்
கிடந்தியங்கும்
படியாய்க்கிடந்துன் பவளவாய்
காண்பேனே.

செடிபோல் வளர்ந்து வரும் வினைகளைப் போக்கும் திருமாலே! திருவேங்கடமுடையானே! உன்னுடைய திருக்கோயிலில் அடியார்களும், தேவர்களும், தேவமகளிரும் அமர்ந்து செல்லும் படியாகக் கிடந்து உன்னுடைய பவளம் போன்ற செவ்வாயைக் கண்டுகளிக்கும் நல்வாய்ப்பினை எனக்கு அருள்வாயாக எனக் குலசேகர ஆழ்வார் வேண்டுகிறார்.

இவ்வாறு குலசேகர ஆழ்வார் தமக்குத் திருமாலின் மீதுள்ள அன்பை வெளிப்படுத்துகிறார். திருமால் கோயில் கொண்டுள்ள திருவேங்கடமலையிலேயே இருந்து திருமாலையே கண்ணாரக் கண்டு கொண்டிருக்கும் நல்வாய்ப்பினை வேண்டுகிறார் குலசேகர ஆழ்வார்.

இவைபோன்ற நெஞ்சை உருக்கும் பக்திமிகு பல பாடல்களை ஆழ்வார்கள் யாத்த பாசுரங்களில் பரவலாகக் கண்டு களிக்கலாம். இவற்றைக் கசடறக் கற்று இசை இன்பத்தையும் பக்திச் சிறப்பையும் தமிழ் இன்பத்தையும் அடைவோமாக.

*****

## அபிஷேகப் பொருள்களும் அவற்றால் பயன்களும்

| | பொருள் | பயன் |
|---|---|---|
| 1. | எண்ணெய் | சுகம் |
| 2. | மாப்பொடி | கடன்தீரும் |
| 3. | நெல்லி முள்ளி | நோய் நீங்கும் |
| 4. | பஞ்சகவ்யம் | தூய்மை |
| 5. | பஞ்சாமிர்தம் | வெற்றி |
| 6. | நெய் | வீடுபேறு |
| 7. | பால் | ஆயுள் வளரும் |
| 8. | தயிர் | மக்கட்பேறு |
| 9. | தேன் | இன்பம் |
| 10. | கரும்புச்சாறு | பிணி நீங்கும் |
| 11. | சர்க்கரை | சத்ருவை அழிக்கும் |
| 12. | பழங்கள் பழச்சாறுகள் | கோபம் நீங்கி நற்குணம் ஏற்படும் |
| 13. | எலுமிச்சம்பழம் | தைரியம் மிகவாகும் |
| 14. | சந்தணம் | லட்சுமி கடாட்சம் |
| 15. | அன்னாபிஷேகம் | உயர்பதவி |

தகவல்: திரு. டி. பூபதிராவ் - சென்னை.

# திருக்கச்சி நம்பிகள்

பஞ்சு. அரங்கநாதன் - கீழரங்கம்.

முன்னுரை :

ஸ்ரீ வைஷ்ணவ ஆச்சார்ய பரம்பரையில் திருக்கச்சி நம்பிகள் முக்கிய இடம் பெறுகிறார். காஞ்சிபுரம் வரதராஜப் பெருமாளின் அன்புக்குரியவர். அவனிடம் நேரில் பேசும் பாக்கியம் பெற்றவர். ஸ்ரீராமானுஜரின் குருவாக போற்றப்படுவர். இத்தகைய பல பெருமைகளை உடைய திருக்கச்சி நம்பிகள் அருள் வரலாற்றை சிறிது காணலாம்.

திரு அவதாரம் :

சென்னை மாநகருக்கு மேற்கே 20 கி.மீ. தொலைவில் உள்ள பூவிருந்தவல்லி என்ற ஊரில் வீரராகவசெட்டியார், கமலா அம்மையார் இருவருக்கும் மகனாகக் கி.பி. 1009 கலியுகம் 4110 சௌம்ய ஆண்டு, மாசிமாதம், சுக்லபட்ச தசமி திதி, வியாழக்கிழமை, மிருகசீரிட நட்சத்திரத்தில் சபரியின் அம்சமாக அவதரித்தார். இவரது இளமைப்பெயர் கஜேந்திர தாசர். முறைப்படி குல வித்தைகள் கற்று சிறந்து விளங்கினார். ஸ்ரீமந்நாராயணன் மேல் பக்தி கொண்டார்.

நந்தவனத்தொண்டு :

தந்தையார் தன் முதிய வயதில் சொத்தை தன் நான்கு மகன்களுக்கும் சமமாக பிரித்துக் கொடுத்தார். மேலும் விருத்தி செய்ய உத்தரவிட்டார். நம்பிகள் காஞ்சிபுரம் வரதராஜன் மேல் பேரன்பு பூண்டு பூவிருந்தவல்லியில் நந்தவனம் அமைத்து வாசனைப் பூக்களை மாலைதொடுத்து தினமும் காஞ்சி சென்று வரதனுக்கு சமர்ப்பித்தார். சொத்து அழிந்தது. தந்தையார் விசாரித்த போது கலங்காப் பெருநகரில் சேமித்து வைத்துள்ளேன் என்றார். தந்தை சினந்து 'நீ தாசனாகப் போ' எனக்கூற நம்பிகள் தாசனானார்.

திருக்கச்சி நம்பிகள் :

தினமும் பூவிருந்தவல்லியில் இருந்து காஞ்சிபுரம் வந்து மாலை சமர்ப்பித்து மீண்டும் பூவிருந்தவல்லி போகும் நம்பியின் உடற்சோர்வை நீக்க எண்ணிய வரதராஜப் பெருமாள் காஞ்சியிலேயே தங்கி மேலும் ஆலவட்டத்தொண்டு செய்யவும் உத்தரவிட்டான். நம்பிகளும் அவ்வாறே செய்துவிரைவில் வரதராஜனுடன் நேருக்குநேர் பேசும் பாக்கியம் பெற்று திருக்கச்சி நம்பிகள் என்று போற்றப்பெற்றார். ஸ்ரீஆளவந்தாரிடம் பஞ்சசமஸ்காரம் பெற்று மேலும் சிறந்து விளங்கினார்.

நம்பியின் பெருமை :

திருக்கச்சிநம்பிகள் தினமும் காலையில் நீராடிவரும் போது அவருடைய திருவடித்துகளை ஒரு பக்தன் எடுத்து தன் தலையிலும் உடம்பிலும் பூசிக்கொண்டான். இப்படி பலசெய்தான். நம்பிகள் அவனை கூப்பிட்டு விசாரித்தார்.

பக்தன் மிகவும் பணிவாக "நம்பிகளே! தாங்கள் வரதராஜப் பெருமாளுக்கு மிகவும் வேண்டியவர். அவனுக்கு நந்தவனத்தொண்டும், திருஆலவட்டத்தொண்டும் (விசிறி) செய்கிறீர்கள். இவற்றைக்கூட யாரும் செய்துவிடலாம். ஆனால் வரதராஜன் தன் அர்ச்சை நிலையைக் குலைத்துக் கொண்டு தங்களுடன் நேருக்கு நேர் பேசி மிகவும் சந்தோஷமாக இருக்கிறான். ஆகவே தங்கள் திருவடித்துகளும் மோட்சம் தரும். தயவு செய்து பெருமாளிடம் எனக்கு மோட்சம் உண்டா? என்று இன்றிரவு கேட்டுச் சொல்லுங்கள் என்று வேண்டிக்கொண்டான். அவ்வாறே இரவு வரதனிடம் கேட்க உமது பாத தூளி படுதலால் நிச்சயம் மோட்சம் உண்டு என்றான். இதனால திருக்கச்சி நம்பிகளின் பாத தூளியே ஒருவனுக்கு மோட்சம் அளிக்கும் என்று உறுதியாயிற்று. நம்பியின் பெருமையும் உலகு அறிந்தது.

பாகவதசேவையின் சிறப்பு

தன் பாத தூளியே ஒருவனுக்கு மோட்சம் தந்தது. ஆகவே தனக்கு மோட்சம் நிச்சயம் என்று நம்பிகள் எண்ணினார். வரதராஜனிடம் கேட்டார். ஆனால் வேண்டுவார் வேண்டும் வரங்களை எல்லாம்

தருபவன். அதனாலேயே வரம் தரும் ராஜன் என்றும் வரதரா ஜன் என்றும் பெயர் பெற்றவன். நம்பிக்கு 'மோட்சம் கிடையாது என்று கண்டிப்பாகக் கூறிவிட் டான். அது ஏன்? இறை வன் முன்னிலையில் அனைவ ரும் சமம். எல்லோருக்கும் அவ னுடைய குழந்தைகள். இந்த பிரபஞ்சம், அதில் உள்ள ஜீவ ராசிகள், நல்லவர், தீயவர், எல் லாம் பகவானின் குழந்தைகள். இந்த பேருண்மை நம்பிக்கு வர தராஜன் கூறிய பதிலால் நிரூ பணம் ஆயிற்று.

## ஆனைக்கும் பானைக்கும் சரி :

நம்பி! நீ நந்த வனத்தொண்டு செய்தாய்! திரு . ஆலவட்ட கைங்கர்யம் செய்தாய். இவை பகவத் சேவை. நாமும் மிக மகிழ்ந்து உன் பக்திக்கு கட்டுப் பட்டு எம் அர்ச்சை நிலையை குலைத்துக்கொண்டு உம்முடன் பேசினோம். ஆனால் மோட்சம் பெற பகவத் சேவை மட்டும் போதாது. பாகவத சேவை யும் வேண்டும். உமக்கு அது இல்லை. எனவே பாகவத அபி மானம் பெற்ருல் பேறு பெற லாம். இல்லையே இல்லை. உனது சேவைக்கும் எனது பேச்சுக்கும் சமமாகி விட்டது. போய் பாகவத அபிமானம் பெற்று வாரும் என்று கூரா கச் சொல்லி விட்டான் கருணு மூர்த்தி. ஏனென்ருல் பாகவத சேவையின் உயர்வு அப்படி.

## அடியார் உயர்வு :

சைவ சமயத்தில் சுந்தர மூர்த்தி நாயனார் என்பவர் ஏழாம் திருமுறைப்பாடல்களை அருளியவர் சிவனுக்கு நண்பர். ஒருமுறை திருவாரூர் கோயி லுக்கு சென்ருர். கோயில் மகா மண்டபத்தில் சிவபூஜை செய்து கொண்டு இருந்த அடியார் கள் எழுந்து நின்று வணங் கினர். சுந்தரர் அவர்க ளுக்கு பதில் மரியாதை செய் யவில்லை. ஏனென்ருல் சிவ னுக்கே நண்பர். ஆனால் 63 வருள் ஒருவராகிய விறன்மிண் டநாயனார் என்பவர் அடி யாரைத் தொழாத சுந்தரன் நமக்கு தேவையில்லை. அவ னுக்கு அருள் செய்யும் திரு வாரூர் தியாகராஜனும் நமக்கு தேவையில்லை என்று முழங்கி அடியார் பெருமையை நிலை நாட்டினார்.

## பாகவத சேவை :

வரதராஜப்பெருமாள் கூறிய படி பாகவத சேவையின் முக்கியத்துவத்தை உணர்ந்து கொண்ட திருக்கச்சிநம்பிகள் ஸ்ரீரங்கம் சென்று திருக்கோட் டியூர் நம்பியிடம் தம்மை யார் என்று தெரிவிக்காமல் மாட் டுக்காரனாக வேலை செய் தார். ஒருநாள் கடும்மழை பெய்தது. எனவே மாட்டுக் காரனைத் தேடிக் கொண்டு திருக்கோட்டியூர் நம்பி வந்தார். கொட்டும் மழையில் பசுவின் மேல் மாட்டுக்காரன் படுத்து இருந்தான். ஏன் என்றபோது பசு மழையில் நனைந்தால் சீதளம் வரும். பசுவின் பால் அருந்த தாங்களும் சீதள நோய் வாய்ப்படுவீர்கள். அதனால் பசுவை மழையில் இருந்து காப் பாற்ற அவ்வாறு செய்தேன் என்ருர். திருக்கோட்டியூர் நம்பி மிகவும் மகிழ்ந்து மாட்டுக்கார னின் சேவையை அங்கீகரித் தார். 'நம் பையன்' என்று போற்றினார். இவ்வாருக பாக வத அபிமானம் பெற்ற திருக் கச்சி நம்பிகள் பாகவத சேவை யின் இன்றியமையாத முக்கி யத்துவத்தை உலகிற்கு வெளிப் படுத்தி மீண்டும் காஞ்சி வரத னிடம் சேவைக்கு வந்தார்.

## நம்பி கரத்தாலே அமுது :

பாகவத அபிமானம் பெற்று மீண்டும் நந்தவனத்தொண் டும், திருஆலவட்டத்தொண்டும் செய்து வந்த திருக்கச்சி நம் பியின் கரத்தாலே அமுது செய்தருள விரும்பிய வரத ராஜப்பெருமாள் தளிக்கைக்கு திரையிடும் நேரத்தில் அர்ச்ச கரை வெளியே அனுப்பிவிட்டு அர்ச்சாவதார நிலையிலிருந்து மாறி நம்பி கரத்தாலே எல்லா உணவையும் அமுது செய்து அர்ச்சை நிலைக்கு மீண்டான். வெறும் பாத்திரங்களைக்கண்ட அர்ச்சகர் திருக்ச்சி நம்பிகள் தான் மரபை மீறி உண்டார் என்று பழி சுமத்தினார். பாவம் நம்பி. 1000 தளிகை அமுது செய்தல். திருக்கச்சி நம்பிகள் பெருமையை உலகு அறிய வேண்டி ஒருநாள் வட தேச வணிகன் கனவில் கண் டபடி காஞ்சி வந்து 1000 தளிகை சர்க்கரைப் பொங்கல் சமர்ப்பித்தான். திரைபோட்ட பின் வரதராஜன் நம்பி கரத் தாலே 1000 தளிகையும் உண் டான். திரை அகன்றது. 1000 பாத்திரங்களும் காலி. நிச்சம் திருக்கச்சி நம்பி 1000 தளிகை உண்ண முடியாது. அனைவரும் நம்பியின் மீது வீண்பழி சுமத் தியதற்கு மன்னிப்பு வேண்டி னர். அந்நிலையில் 1000 பாத் திரங்களும் பொங்கல் நிறைந் தது. நம்பி பெருமை உலகு அறிந்தது.

## வரதராஜன் சிஷ்யன் ஆதல் :

ஒருநாள் இரவு நம்பி கள் பெருமானோடு உரையாடி வீடு திரும்ப நேரமாகிவிட்டது. மழையும் பெய்தது. நம்பிகள்

ஆலய வாசல் வந்ததும் தன் சிஷ்யன் வரதனை அழைத்தார். ஆனால் சிஷ்யன் வரதன் அப்பொழுது நல்ல உறக்கத்தில் இருந்தான். எனவே அண்டசராசரங்களை எல்லாம் ஆட்சி செய்யும் வரதராஜப்பெருமாளே சிஷ்யன் வடிவில் வந்து நம்பிகள் கால்களில் பாதரட்சை யிட்டு ஒருகையில் தீவட்டியும் மறுகையில் குடையும் பிடித்துக் கொண்டு திருமடம் கொண்டு வந்து சேர்த்தான். மறுநாள் காலை சிஷ்யன் வரதன் வந்து தான் உறங்கியதைக் கூறி மன்னிப்பு வேண்டினார். உண்மை அறிந்த நம்பிகள் பேரருளாளன் ஆகிய வரதராஜப்பெருமாளின் அன்பையும், கருணையையும் எண்ணி வியந்தார்.

## காஞ்சியைவிட்டு நீங்குதல்

அடிக்கடி வரதராஜப்பெருமாள் தனக்கு அன்பு மிகுதியால் பணிவிடை செய்வது அபசாரம் ஆகிறதே என்று திருக்கச்சி நம்பிகள் திருவேங்கடம் சென்று திருஆலவட்ட கைங்கர்யம் செய்தார்.

## வேங்கடவனின் மறுப்பு :

திருவேங்கடமலையில் வாழும் ஸ்ரீநிவாசப்பெருமாள் திருக்கச்சி நம்பியே! எமக்கு உமது கைங்கர்யம் தேவையில்லை. நீர் அக்னியில் தோன்றிய தேவராஜப் பெருமாளுக்கே ஆலவட்டத் தொண்டு செய்யும்" என்று அருளினான். ஆனால் நம்பி காஞ்சி செல்லாமல் ஸ்ரீரங்கம் சென்றார்.

## அரங்கனின் ஆணை :

இரண்டு ஆறுகளுக்கு இடையிலேயே உறங்கும் பெருநதி அரங்கநாதப்பெருமாளும் "நம்பி, நீ வரதராஜனிடமே செல்" என்று அருளினார். ஆனால் நம்பி காஞ்சி செல்லாமல் ஸ்ரீஆளவந்தார் திருமடத்தில் வாழ்ந்துவந்தார்.

## வரதனிடமே வருதல் :

ஆனால் திருக்கச்சி நம்பியின் பிரிவை சிறிதும் பொறுத வரதராஜப்பெருமாள் ஆளவந்தார் கனவில் தோன்றி திருக்கச்சி ம்பிகளை காஞ்சிக்கு அனுப்பி வைக்கப் பணித்தான். ஆச்சாரியர் உத்தரவை மீற முடியாத நம்பிகள் காஞ்சியை அடைந்தார்.

## ஏழரைநாட்டுச் சனி :

உலக விதிப்படி நம்பிகளுக்கு ஏழரை ஆண்டு சனி திசை நெருங்கியது. எனவே வரதராஜன் நம்பியை கூப்பிட்டு எச்சிரித்தார். நம்பிகள் மறுக்கவே ஏழரை மாதம் என்றார். மீண்டும் மறுக்கவே ஏழரை வாரம் என்றார். கடைசியாக ஏழரை நாழிகை (Three hours) என்று சனிக்கு அனுமதி வழங்கப்பட்டது.

## நம்பிக்கு சிறைவாசம் :

ஏழரை சனியின் கொடுமையால் வரதராஜப்பெருமாளின் ரத்னஹாரம் காணவில்லை. அர்ச்சகர்கள் நம்பியையே சந்தேகித்தனர். அரசன் நம்பியை சிறையில் இட்டான். ஏழரை நாழிகை சனியின் ஆதிக்கம் முடிந்தது. ரத்னஹாரம் கிடைத்தது. நம்பிகளை விடுவித்து மன்னிப்பு வேண்டினர். நம்பிகளோ ஏழரை ஆண்டுப் பிரிவு வரதனின் கருணையால் ஏழரை நாழிகையில் முடிந்ததை எண்ணி மகிழ்ந்து தேவராஜப்பெருமாளுக்கு 'அஷ்டகம்' அருளினார்.

## ஸ்ரீராமானுஜனின் குரு :

ஸ்ரீவைஷ்ணவத்தின் நிகரில்லாத மேதை, ஆச்சார்யரத்னம், சிந்தனைக் களஞ்சியம். சீர்த்திருத்தச் செம்மல் ஸ்ரீபாஷ்யம் அருளிய ராமானுஜரின் [1017 A.d to 1137 A.D.] குருவாகவும் திருக்கச்சி நம்பிகள் விளங்கினார். தேவராஜனுக்கு திருமஞ்சன தீர்த்த கைங்கர்யம் செய்து வந்த இளையாழ்வார் நம்பிகளிடம் பஞ்ச சமஸ்காரம் அருள வேண்டினார். ஆனால் நம்பிகள் தன் பிறப்பைக் காரணம் காட்டி மறுத்துவிட்டார். பிறகு குருப்பிரசாதம் அருந்த தன் வீட்டுக்கு அமுது செய்ய அழைத்தார். இளையாழ்வாரின் அழைப்பை ஏற்ற நம்பிகள் இளையாழ்வார் இல்லாத சமயம் அவர்வீடு சென்று உணவு அருந்தி சேஷம் (உணவு மீதி) இல்லாதபடி செய்துவிட்டார். கடைசியாக இளையாழ்வார் விருப்பப்படி தேவராஜனிடம் 6 பதில்களை பெற்றுத் தந்தார். இவ்வகையில் ராமானுஜரின் குருவாக நம்பி விளங்கினார்.

## நிறைவுரை :

திருக்கச்சி நம்பிகள் காஞ்சி வரதராஜப்பெருமாளுக்கு நெடுங்காலம் திரு ஆலவட்டத் தொண்டு செய்தார். தேவராஜப் பெருமாளுடன் தினமும் நேருக்குநேர் உரையாடுவார். பேரருளாளப்பெருமாள் மீது இவர் அருளிய 'தேவராஜ அஷ்டகம்' சொற்சுவை, பொருட்சுவை, பக்திச்சுவை நிரம்பியது. திருக்கச்சி நம்பிகளின் அர்ச்சாவதார திருமேனிப் பிரதிஷ்டை பூவிருந்தவல்லியில் நடந்தது. திருக்கச்சி நம்பிகளின் திருவடிகள் வாழ்க!



வாருங்கள்! காணுங்கள்!!

திருமலை திருப்பதி தேவஸ்தானம், திருப்பதி.

# ஆலய தரிசன சுற்றுலா



திருப்பதி மற்றும் அதனைச்சுற்றியுள்ள முக்கிய திருக்கோயில்களை மிக எளிதில் பக்தர்கள் தரிசிக்கும் வண்ணம் தி.தி. தேவஸ்தானம் ஆலய தரிசன சுற்றுலாவை அறிமுகப்படுத்தியுள்ளது. ஒவ்வொரு நாளும் காலை 6 மணி, 10 மணி மறறும் நண்பகல் 2 மணி ஆகிய நேரங்களில் திருப்பதி இரயில் நிலையத்திற்குப் பின்புறம் உள்ள தி.தி. தேவஸ்தானத்தாரின் இரண்டாவது தரும சத்திர வளாகத்திலிருந்து இதற்கென்றே சிறப்பு பேருந்துகள் புறப்படுகின்றன.

காணும் ஆலயங்கள் :

1) ஸ்ரீ பத்மாவதி தாயார் திருக்கோயில்.
2) ஸ்ரீ ஸ்ரீனிவாசமங்காபுரம் திருக்கோயில்.
3) ஸ்ரீ அகஸ்தீஸ்வரசுவாமி திருக்கோயில்.
4) ஸ்ரீ கபிலேஸ்வரசுவாமி திருக்கோயில்.
5) ஸ்ரீ ஹரேராம ஹரேகிருஷ்ண திருக்கோயில்.
6) ஸ்ரீ கோதண்டராமசுவாமி திருக்கோயில்.
7) ஸ்ரீ கோவிந்தராஜசுவாமி திருககோயில்.

பேருந்து கட்டணம் :

பெரியோர் : ரூ. 20/- (நபர் ஒருவர்க்கு)

சிறுர் : ரூ. 10/- (நபர் ஒருவர்க்கு)

[சிறப்பு தரிசன வசதியும் செய்துதரப்படும்.]

நண்பகல் 2 மணிக்கு புறப்படும் பேருந்தில் மட்டுமே ‘வட்டார விஞ்ஞான மையத்’திற்கும் யாத்திரிகர்கள் அழைத்துச் செல்லப்படுவர்.

(தொடர் கட்டுரை)

# பகவத் கீதை

பதினாறும் அத்தியாயம்

## தெய்வாஸுர ஸம்பத் விபாகயோகம்

(உமைப்பிரியன்)

### பகவான் கூறியது :

ஆத்மஸம்பாவிதா: ஸ்தப்தா
தனமானமதான் விதா: ।
யஜந்தே நாம யக்ஞைஸ்தே
தம்பேனோவிதிபூர்வகம் ॥ (17)

"தற்புகழ்ச்சியில் விருப்பம் உள்ளவர், பணிவு இல்லாதவர், செல்வச் செருக்கும் (நான் எனும்) அகந்தையும் கொண்டவர்கள் ஆகியோர் பெயரளவில் விதிப்படி ஆடம்பரத்திற்காக வேள்விகளை நடத்துகின்றனர்".

[புகழ்ச்சியில் மயங்காதவர்கள் எவரும் இல்லை என்றே சொல்லலாம். அதுவும் பதவியால், பொருளால், உயர்ந்து இருப்பவர்கள் தங்களையும் மீறி, புகழ்ச்சியில் மூழ்கிவிடுகின்றனர். சமுதாயம் அவர்களை புகழ்ச்சி வெள்ளத்தில் தள்ளிவிடுகிறது. மூழ்கடித்து விடுகிறது என்று கூறினாலும் அதுமிகையாகாது. புகழ்ச்சியில் மயங்கும் மக்கள், தங்கள் நிலையைத் தக்கவைத்துக் கொள்ள பொது நிகழ்ச்சிகளை முன்வந்து நடத்துவர். இதற்காகத் தங்கள் பதவியைத் தவறுகப் பயன்படுத்தித் தங்கள் பணத்தை, தண்ணீராகவும் செலவழிப்பர். இத்தகையோர் பலர் கோயில் கட்டுவதையும், அக்கோயில் சம்பந்தப்பட்ட நிகழ்ச்சிகளையும் தங்கள் சுயவிளம்பரத்திற்காக வீண் ஆடம்பரத்திற்காக மேற்கொள்வர். இதனால் அவர்கள் தற்காலிக மனத்திருப்திமட்டுமே பெற முடியுமே தவிர, மனயமைதி என்பது அவர்கள் பொறுத்தவரை கானல்நீராகவே இருக்கும்.]

அஹங்காரம் பலம் தர்பம் காமம்
க்ரோதம் ச ஸம்ச்ரிதா: ।
மாமாத்மபரதேஹேஷு ப்ரத்விஷந்தோ
அப்ய ஸூயகா: ॥ (18)



"அகங்காரம், வலிமை (பலம்) இறுமாப்பு, காமம், குரோதம் ஆகியவற்றை உடையவர்கள், தங்கள் உடலிலும் மற்றய உயிர் உடல்களிடத்தும் உறைகின்ற என்னை வெறுத்து அவமதிக்கின்றனர்."

[மதம், இனம், மொழி, இடம் எனும் வேற்றுமைகளைக் கடந்து மனிதனாகத் திகழ்ந்தால் போட்டி, பொறுமை, வன்முறை போன்ற தீயபண்புகள் தோன்று-வளரா என்பதை இந்து சமயம் இச்செய்யுளில் நன்றாக கோடிட்டுக்காட்டியுள்ளதை பகவான் மூலம் அறிகின்றோம். தன் பலத்தை தீயனவற்றிற்குப் பயன்படுத்துவதும், 'என்னால்மட்டும் முடியும், நானே அனுபவிப்பேன்' போன்ற அகங்கார, மமதை, இறுமாப்பு உணர்வுகள் அமைவதும், எனக்குக் கிடைக்காதது, நான் அனுபவிக்காதது, எனக்கு இன்பம் தராதது யாவும் பிறர்க்கும் அமையக் கூடாது எனும் பகைமை உணர்வால் பெறப்படும் குரோதம் எனும் பகைமை உணர்வு வளருவதும் மனிதனை மிருகமாக்கி விடுகின்றன. மற்ற உயிர்கள் யாவும் அவ் இறைவனின் படைப்பாற்றலே என்பதை, அவ்வுயிர்களின் ஆத்மாவாக அவ் இறைவன் திகழ்கின்றான் என்பதை உடல்களின் தோற்றங்கள் மாறுபட்டாலும் அவற்றுள் இருக்கும் உயிர் எல்லோர்க்கும் போல்தான் என்பதை ஒரு சிறிது கணநேரம் நினைத்தாலே அதுவே மனிதனைத் திருத்திடும் நல்வாய்ப்புக்களாக அமையும்.]

தானஹம் த்விஷத: க்ருரான்
ஸம்ஸாரேஷு நராதமான் |
க்ஷிபாம்யஜஸ்ரமசுபானாஸு
ரீஷ்வேவ யோனிஷு || (19)

'பகைமை உணர்வு கொண்டவர்கள் சிந்தனையாலும், செயலாலும், கொடியவர்களாகத் திகழ்வோர், கீழான குணம் கொண்ட கடைமக்கள், இழிந்த குணம் உடையோர் ஆகியோரை நான், மறுபடியும் மறுபடியும் பிறந்து இறந்து உழலும் இந்த அசுர குணம் மிக்க (மக்கள்) இனத்திலேயே பிறப்பிக்கின்றேன்."

[பித்தளைப் பாத்திரத்தின் மீது களிம்பு இருக்கும் வரை அப்பாத்திரங்கள் பளபளப்பதில்லை. அக்களிம்பினை புளியினால் நன்றாகத் தேய்த்து அழித்திடும்போதுதான், பாத்திரம் பளிச்சிடும். மனிதனின் சிந்தனை, செயல், மனம், ஆகியன ஆணவம், குரோதம், காமம் எனும் களிம்பினால் மூடப்பட்டிருக்கும் வரை, மனிதனின் ஆன்மா இறைவன் எனும் பளபளப்பை அடைவதில்லை. இங்கு இறைவன் மனிதனின் கீழான குணங்களைக் கண்டு, பெறுதற்கரிய மனிதப்பிறவி அளித்தும் அதனைத்தன் தூய சிந்தனையினால் பயன்படுத்தி இயற்கை எனும் இறைவனை அறிந்துகொள்ள சிறிதும் விரும்பமின்றி, மிருகத்தைப் போன்று வாழ்தலைக்கண்டு, சிறிதே கோபம் கொண்டு, அவனுக்கு மேலும் பாடம் புகட்ட, அவனை மீண்டும் மீண்டும் அந்தக் கீழான குண இயல்புகளைக் கொண்ட உணர்வுகளையே தந்து, கரைசேரமுடியா பிறவிப்பெருங்கடலில் இறைவன் தள்ளிவிடுவிடுகின்றான். 'சொல்லறிவை'விட 'பட்டறிவே' அவனைத் திருத்துமென்றால் அந்த வழியினையே இறைவன் மனிதனுக்கு காட்ட விரும்புகின்றான்.]

ஆஸுரீம் யோனிமாபன்னா மூடா
ஜன்மனி ஜன்மனி |
மாமப்ராப்யைவ கௌந்தேய ததோ
யாந்த்யதமாம் கதிம் || (20)

"குந்தியின் புதல்வா, இந்த மூடர்கள் (காம, குரோத, காம உணர்வுகளால் பின்னப்பட்டு மீண்டும் மீண்டும் அசுரப் பிறவி எடுக்கும் மக்கள்) பிறந்து, இறந்து, என்று பல பிறவிகள் தோறும் அசுர குணம் கொண்டவர்களின் குடும்பத்தில் தோன்றி அதனால் என்னை அடையாமல் கீழான நிலையையே அடைகின்றான்."

[இறைவனை மறந்த மனிதன் இறைமைப்பண்புகள் தன்னை அண்டவிடுவதில்லை. அதனால் அவனிடம் தீய உணர்வுகளே தீய சிந்தனைகளே குடிபுகுவதால் தவறுகள் தொடர்ந்து அவன் தன் வாழ்க்கையில் ஒவ்வொரு நிலையிலும் மேற்கொள்வதால், மீளமுடியா படுகுழியில் தானே விழ வழிவகுத்துக் கொள்கிறான். சிற்றின்பங்களை அனுபவித்தலே வாழ்க்கையின் குறிக்கோளாகக் கருதி அவற்றை அடைய, அனுபவிக்க பொய் பொறாமை, சூது, வன்முறை என்ற உணர்வுகளுக்கு அடிமையாகி விடுகின்றான். அதனால் மிருகத்தைவிட கேவலமான வாழ்க்கையை மேற்கொள்கிறான். இருந்தாலும் மனிதனிடம் உள்ள ஒரு பெருமை அவனிடம் இருக்கும் சிந்திக்கும் ஆற்றலாகும். இந்த ஆற்றல் அறிவுடன் சேரும் போது மனிதன் தன் பிறவியின் சிறப்பினை அறிகின்றான். இந்த 'அறியும்' அரிய வாய்ப்பு ஒரு கண நேரம் அவன் வாழ்க்கையில் பல சமயங்கள் இறைவனால் கொடுக்கப்படுகின்றன. இது இறைவனின் கருணைக்கு ஓர் எடுத்துக்காட்டு. இறைவனின் இலட்சியம்கூட மனிதனை உயர்த்திடவேண்டும் என்பது

## பூமியெங்கும் பெருமழை!

வைணவ க்ஷேத்திரங்கள் 108-ல் வராக க்ஷேத்திரம் என்று கூறப்படும் ஸ்ரீவில்லிபுத்தூர் பாண்டிய நாட்டில் உள்ளது. சூடிக்கொடுத்த ஸ்ரீஆண்டாள் அவதாரம் செய்த புனித பூமியாகும். இங்கு ஸ்ரீஆண்டாள் ரெங்கமன்னாருடன் கருடாழ்வாருக்கும், தங்களுக்குச் சமமாய் சரியாசனம் தந்த கோயில காணக் கண் கோடி வேண்டும்! இங்கு ஆடிமாதம் ப்ரமோத்ஸவத்திருவிழா ஒன்பது நாள் நடைபெறுகிறது. பின்பு ஆடிப் பூரநடசத்திரத்தில் ஸ்ரீஆண்டாள் ரெங்க மன்னாருடன் பெரிய தேரில வலம் வருவர்.

இந்தத் தேர் தமிழகத்திலேயே பெரிய தேராகும். கலைநுணுக்கம் நிறைந்த மரச் சிற்பங்கள் தேரில் எண்ணற்றவை காணக்கிடைக்கிறது. ஆன்மிக கதைச் சிற்பங்களும், இல்லற தத்துவங்களை உள்ளடக்கிய அபூர்வ மரச்சிற்பங்களும் தேரில், பார்ப்போர் கண்களுக்கு விருந்தாகும்.

முன்காலங்களில் தேர் நிலையம் வந்து சேர மாதக் கணக்கில் ஆகும். இந்த வருடம் அதிசயமாக தேர் இழுத்த இரண்டாவது நாளே. 12 மணி நேரத்திற்குள் தேர் அதன் நிலையம் வந்து சேர்ந்தது!

மேலும் தேர்நிலையம் சேர்ந்தவுடனே திருப்பாவையில் ஸ்ரீஆண்டாள் மழைக்கடவுளை நோககி "பறபநாபன் கை ஆழிபோல் மின்னி வலம்புரிபோல் அதிர்ந்து, சார்ங்கம் உதைத்த சரமழைபோல் வாழ உலகினில் பெய்திடாய! என்று வேண்டியபடி கனத்த இடியும், மின்னலும், பெருமழையும பகலில் 3 மணி நேரம நீடித்தது. மழையினறி வாடிய பயிர்கள் மட்டுமா! எல்லோர் உள்ளததிலும் மகிழவைக் காணமுடிநதது. ஆண்டாள் தேர இழுத்தால அன்றே அமுத மழை என்ற பெரியோரவாக்கு உண்மையன்றே!

தகவல்: திரு. எஸ்.எஸ். மணியம் - ஸ்ரீவில்லிபுத்தூர்.

தான். ஏனென்றால் அந்த மனி தனுள் ஆத்மாவாக அவ் இறை வன் இருக்கின்றான். ஆகவே இறைவன் மனிதனை அடி யோடு அழிய விடுவதில்லை.]

த்ரிவதம் நரகஸ்யேதம் த்வாரம்
நாசனமாத்மன: ।
காம: க்ரோதஸ் ததா லோபஸ்-
தஸ்மாதேதத் த்ரயம் த்யஜேத் ॥(21)

"நரகத்தின் நுழைவாயிலாகக் கருதப்படும் காமம், குரோதம், லோபம் ஆகியன ஜீவாத்மா வான மனிதனைக் கெடுக்கும் ஆற்றல் உடையன. ஆகவே இந்த மூன்றையும், (ஒருவன் தன்னிடமிருந்து) விலக்கிடுதல் வேண்டும்."

[மனிதனை எந்த நிலைக் கும் தள்ளிவிடும் அசுரததனமை கொண்டன காமம், குரோ தம், மற்றும் லோபம் எனும் மூன்று பண்புகளாகும். ஐம் பொறிகளை சிற்றின்பங்களுக் காக உடல் இன்பங்களுக் காக எந்தச் சூழ்நிலையிலும் தள்ளிவிடும் ஆற்றல் வாய்ந்தது காமம். காம இச்சையை அனு பவித்திட மறுக்கும் எதனையும், எவரையும் அழித்திடும் கோபம்- குரோதம் மனிதனை மிருகமாக் கிவிடும் தன்மை கொண்டன. காமவயப்பட்ட மனிதன், அனு பவித்திடும் பொருளை தனக்கு மட்டுமே சொந்தம் என்று எண் ணும் உணர்வு லோபம் என்று கொள்ளலாம். அல்லது சிற் றின்பங்களை அனுபவிப்பதற் கான பொருளை அலைந்து அலைந்து சேர்த்து வைக்க வும், பேராசை காரணமாக, அப் பொருளின் மீது பேய்த்த னமாக உரிமை கொண்டாடுவ தும் லோபம் என்றும் பொருள் கொள்ளலாம். இந்த மூன்று குணங்களே மற்ற அசுர குணங் களுக்கு மூல காரணங்களாக விளங்கும். இம்மூன்றையும் மனிதன் தன்னிடமிருந்து விலக் கினால் - அழித்தால் அவ னுடைய செயல், சிந்தனை தூய்மையாக்கப்பட்டு மயக்கம் ஒழிந்து ஜீவாத்மா பரிசுத்தமா கிவிடும்.]

ஏதைர்விமுக்த: கௌந்தேய
தமோத்வாரைஸ்திரிபிர்நர: ।
ஆசரத்யாத்மன: ச்லேயஸ்ததோ
யாதி பராம் கதிம் ॥ (22)

"அர்ச்சுனா! (மேற்சொன்ன) இம் மூன்று நரகவாயில்களிட மிருந்து விடுபட்டவன், தனக் குத்தானே நலம் செய்தவனாக விளங்கி, பின்பு மோக்ஷம் எனும் முக்திநிலையை அடை கின்றான்."

[முனசொன்ன காமம், குரோ தம், லோபம் எனும் அசுரப் பண்புகள் மனிதனிடம் அவனு டைய அறியாமையின் காரண மாகவே அவனிடம் குடிபுகுகின் றன. எப்போது அறியாமையா கிய இருள் விலகி ஞானம், எனும் ஒளி அவனுள் தன் ஒளிக்கிரணங்களை பாய்ச்சுகின் றதோ - அதாவது மனிதன் பிறவியின் பயனை உணர்ந்து அன்பு, தியாகம், கருணை போன்ற இறைமையப்பண்பு கள் அவன் சிந்தனையில், செய லில் படர ஆரம்பிக்கின்றதோ அப்போதே மனிதனை அழித் திடும் முன்பு கூறிய காமம், குரோதம், லோபம் எனும் பண்பு அசுரப்பண்புகள் அழிய ஆரம்

பிக்கின்றன. அதுவே நரகம் எனும் வாயிலை கடந்திட வழி காட்டுகின்றது.]

*ய: சாஸ்த்ரவிதிமுத்ஸ்ருஜ்ய*
*வர்ததே காம காரத: ।*
*நஸ ஸித்திமவாப்னோதி ந ஸுகம்*
*ஸுகம் ந பராம் கதிம் ॥ (23)*

"காம உணர்வுகளுக்கு அடிமைப்பட்டு சாத்திர விதிகளை மீறி நடப்பவன் யாராயினும், அவன் முழுமையடைய மாட்டான். சுகம் பெற மாட்டான். முக்திநிலை அடையப் பெறுன்."

[பரிபூரணம் அல்லது முழுமை நிலை என்பது சித்தி எனும் ஞான அருளின் முடிவுநிலை. அதனை அடைய வேண்டுமென் ருல் காமம் எனும் சிற்றின்ப - உடலின்ப - புகழின்ப உணர்வுகளுக்கு ஆட்படக்கூடாது. அதுவுமின்றி, வாழ்க்கை உண்மைகளை இறைஉண்மைகளை இயற்கையின் ஆற்றலை உணர்த்திடும் சாத்திரம் எனும் அறநூல்கள் - சமய நூல்கள் கூறிடும் உணர்த்திடும் அறவுரைகளை மீறி ஒருவன் நடக்கக் கூடாது. ஏனென்ருல் எது நல்லது எது கெட்டது என்ற பகுத்துப் பார்க்கமுடியாத ஒரு மயக்கம் நிலைக்கே அவனை காமம் தள்ளிவைத்திருக்கும். அந்த காம உணர்விலிருந்து விடுப்பட்டால்தான் சாத்திரம் கூறிடும் உபதேசங்களை அவனால் சிந்தித்துப்படித்தல் முடியும். அதுவரை அவன் சுகம் எனும் ஆத்மானுபவ இன்ப உணர்வினையோ, அதனால் பெறப்படும் முக்தி எனும் பேரின்ப பெருநிலையினையோ அவனால் எண்ணிப் பார்க்கமுடியாது'.

*தஸ்மாச்சாஸ்த்ரம் ப்ரமாணம் தே*
*கார்யாகார்யவ்யவஸ்திதௌ ।*
*ஞாத்வா சாஸ்த்ரவிதானோக்தம்*
*கர்மகர்துமிஹார்ஹஸி ॥ (24)*

"ஆகவே, சாத்திரங்களே உனக்கு, எவை செய்யக்கூடாதன, எவை செய்யக்கூடியன என்று அறுதியிடுவதற்கு - வழி காட்டுவதற்கு தகுந்த சத்திய வாக்காக- பிரமாணங்களாக உள்ளன. (ஆதலால்) சாத்திரங்கள் ஆணையிட்டுக் கூறுவனவற்றை அறிந்து - உணர்ந்து வினைகளை (பணிகளை) மேற்கொள்வாயாக."

[மனிதன் ஆசைகளை அடக்குமளவு அவன் உயர்ந்தவனாகின்ருன். புலலின்பங்களை மறக்குமளவு அவன் பக்குவப்படுகின்ருன். ஆசைகள் பெருகுமளவு மனிதன் பொருமைக்கும், கோபத்திற்கும் இரையாகின்ருன். ஆகவே அவன் தன்னைத் திருத்திக் கொள்ள, தன்னை மேம்படுத்திக் கொள்ள அவனால் சுயமாக சிந்திக்கமுடியாதபோது, நமது முன்னோர்கள் - மாமுனிவர்கள், மெய்யடியார்கள் தந்துவிட்டுப் போன மனுபோன்ற சாத்திரங்கள் - அறநூல்கள் ஆகியன மட்டுமே நமக்கு வழிகாட்டுவனவாகும். புரட்சி என்ற பெயரில், பகுத்தறிவு என்ற போர்வையில் சாத்திரங்கள் கூறும் அரிய வாழ்க்கை உண்மைகளை நாம் ஒதுக்கி வாழ்ந்தோமேயானால், நம் அழிவை நாமே விரைந்து தேடிக்கொள்கிறோம் என்றே பொருளாகும்.]

**பதினாறும் அத்தியாயம் முற்றும்.**

(தொடரும்)

## தான பலன்கள்

1. அன்னதானம் தரித்திரமும் கடனும் நீங்கும்
2. வஸ்திரதானம் ஆயுளை விருத்தி செய்யும்.
3. தேன் தானம் புத்திர பாக்கியத்தை உண்டாக்கும்.
4. நெல்லிக்கனி தானம் ஞானம் உண்டாகும்.
5. தீபதானம் கண்பார்வை தீர்க்கமாகும்.
6. அரிசி தானம் பாபங்களைப் போக்கும்.
7. நெய்தானம் நோய் தீர்க்கும்.
8. பால் தானம் துக்கம் நீங்கும்.
9. தயிர்தானம் இந்திரிய விருத்தி.
10. பழங்கள்தானம் புத்தியும் சித்தியும் கிட்டும்.
11. தங்கம் தானம் குடும்ப தோஷங்கள் நீங்கும்.
12. வெள்ளி தானம் மனக்கவலை நீங்கும்.
13. கோதானம் ரிஷிக்கடன் தேவகடன், பிதுர்கடன் அகலும்.
14. தேங்காய் தானம் நினைத்த காரியம் வெற்றியாகும்.
15. பூமிதானம் பிரம்ம லோகத்தையும் ஈஸ்வர தரிசனத்தையும் நல்கும்.

தொகுத்தவர்: திருமதி. கமலா மாரியப்பன் - கோவை.

# பிரபத்தி நெறி

திரு. ஆ. சுப்பிரமணியன் - புத்தூர்.

பிறவிப் பெருங்கடலி லிருந்து விடுபட்டு முத்தி நிலை அடைய வேண்டு மென்றால் "நான்" என்ற அகங் காரம் அழிய வேண்டும்."யான் எனது என்ற செருக்கறுப்பான் வா-னோர்க்கு உயர்ந்த உலகம் புகும்" என்பது வள்ளுவம். இறை வன் உடையவன் உயிர்கள் அவ னது உடமை. உடையவனுக்கு உடைமையின் நலத்தைப் பாது காப்பதில் அக்கறை உண்டு. ஜீவாத்மாக்கள் பரமாத்மாவிடம் எல்லாம் அவனே; அவன் செய லின்றி இவ்வுலகில் எது வும் இயங்காது என்ற நம்பிக் கையுடன் தஞ்சமடைந்து தன் னையே முழுமையாக ஒப்பு வித்து அவனருளால் உய் வடை வதே பிரபத்திநெறி என்பதா கும். இறைவனிடம் பிரபத்தி பண்ணுவோர் மூன்றுவகைப்ப டுவர் எந்த முறையில் ஆசா ரங்களை மேற்கொண்டு இறை வனைப் பக்தி பண்ணுவது என்று தெரியாமல் இறைவ னிடம் எல்லாப் பாரத்தையும் ஒப்புவிப்பவர்கள் சாதாரணமக் கள். இறைவனுடைய கல்யாண குணங்களையும் எல்லையற்ற சக்தியையும், உணர்ந்திருந்தும் ஞான நிலையில் உள்ளவர்கள் சாதனை புரியும் பக்குவம் பெற் றிருந்தாலும், வேறு கதியற்ற வராய் தம்மையே இறைவனி டம் ஒப்படைத்தவர்கள் ஞானா சிரியர்கள். இறைவனை நினைத்த் மாத்திரத்திலேயே அன்பின் மிகுதியாலும், பிரேம பாசத்தாலும் மனந்தளர்ந்து வேறு வழியின்றி இறைவனைத் தஞ்ச மடைபவர்கள் ஆழ்வார் கள். "எனது மாயை கடத்தற் கரியது என்னைச் சரணமாக அடைபவரே அதைக் கடக்க இயலும்" என்று கண்ணபிரான் கூறுகிறார்.

## முப்பொருள் உண்மை

உலக மக்கள் அறிந்து கொள்ளவேண்டிய பொருள்கள் மூன்று. அவை தத்துவம், இதம், புருஷார்த்தம். தத்து வம் என்பது அறிவுடைப்பொ ருள், அறிவில் பொருள், கடவுள் என்ற முப்பொருள் உண்மை களைப் புரிந்து கொள்ளுதல் இவற்றை முறையே சேதனம், அசேதனம் ஈசுவரன் என்றும் கூறுவர். சேதனம் என்பது உயிர். அசேதனம் என்பது உலகம். இவை யிரண்டை யும் உடலாகக்கொண்டு நீக்க மற நிறைநது பரம்பொருளாக எங்கும் பரவியிருப்பவன் ஈசு வரன். இத்தகைய இறை வனை அடைதற்குரிய நெறியே இதம் எனப்படும். இறை வனை அடைந்தபின்பு பெறப்ப டும் பயனே புருஷார்த்தம் எனப் படும். இந்தத் தத்துவத்தைப் புரிந்துகொண்டு ஒழிவில்கால மெல்லாம் உடனுறைந்து அடி மைசெய்வதே சிறந்தபேறு என் பது வைணவச் சான்றோர்கள் கூற்று. இவ்வாறு இந்நெறி யில் நின்று இறைவனைத் தஞ் சமடைபவர்களின் "நான்" என்ற அகங்காரத்தை அழித்து, அஞ் ஞானத்தை ஒழித்து, பக்தியை அளித்து இறைவன் ஆட் கொள்கிறான். "ஆறு எனக்கு நின்பாதமே, சரணாகமம் தந் தொழிந்தாய்" என்று அருளு வார் நம்மாழ்வார். எல்லாம் அவன் செயல் என்று எண்ணும் போது ஜீவபோதம் ஒழிந்து ஈஸ் வர போதம் தலையெடுக்கி றது. இங்கே ஞானமும் பக்தி யும் இணைகின்றன. ஆன்மாக் களின் உள்ளும் புறமும் இறை வன் இலங்குகின்றான் என்று பிரபந்நன் உணருகிறான்.

## நான்கு நெறிகள்

இறைவனை அடைவதற்குரிய நான்குநெறிகளை பகவத்கீதை கூறுகிறது. 1. கர்மயோ கம், 2. ஞானயோகம், 3. பக்தி யோகம், 4. பிரபத்தி யோகம் என்பன தவம், வேள்வி முதலியன செய்து இறைவனிடமிருந்து பயன்பெ றுவது கர்மயோகம். ஐம்புலன் களை வென்று மனதை ஒருமு கப்படுத்தி தியானத்தில் அமர்ந் திருந்தல், ஞானயோகம். திருக் கோவில் வழிபாடு, தோத்திரம், பூசை செய்வதன் மூலம் பக்தி யில் அழுந்தி நிற்றல் பக்தியோ கம். எனக்கென்று ஏதுமில்லை எல்லாம் அவன் செயல். எல் லாம் அவனுடைமை என்று அவன் திருவடியையே தஞ்ச மாய் அடைந்து நிற்றல் பிர பத்தி யோகம். இந்தச் சரணாக தித் தத்துவத்தையே ஆழ்வார் களும், நாயன்மார்களும் கடைப் பிடித்து வந்தார்கள். பெரும்பா லோர் இந்நெறியில் ஈடுபட்டு வந்ததால் அவர்களைப் பிரபந் நர் என்றும், பிரபந்நகுலம் என் றும் வைணவ உலகம் போற்றி வருகின்றது.

## நியமங்கள்

பிரபத்தி நெறிக்கு ஆன்றோர் கள் வகுத்துள்ள சில நியமங்க ளிருந்தாலும் அவை தேவை யில்லை என்பது சில சான்று களால் தெளியலாம்.

## தேச நியமம்

தேசநியமம் என்பது புண்ணியஸ்தலங்களில்தான் செய்ய வேண்டும் பிற ஸ்தலங்களில் செய்யக்கூடாது என்பது.

## கால நியமம்

கால நியமம் என்பது இள வேனிற்காலங்கள் தவிற மற்றக் காலங்களில் செய்யக்கூடாது என்பது.

## அதிகாரி நியமம்

இன்னின்ன தகுதியுடையவர்கள் தான் செய்யவேண்டும். பிறர்செய்யக்கூடாது என்பது.

## பிரகார நியமம்

பிரகார நியமம் என்பது நீராடி உடல் உள்ளத்தூய்மையுடனும், ஆசாரத்துடனும் செய்யவேண்டும். அப்படியல்லாமல் செய்யக்கூடாது என்பது வேள்வி, அனுஷ்டானங்கள் முதலிய கடமைகளைச் செய்வதற்கு விதிக்கப்பட்டவைகளேயன்றி பிரபத்திநெறிக்குத் தேவையில்லை.

விபீஷணன் கடற்கரையில் இராமபிரானிடம் அடைக்கலம் புகவந்தான். இவன் காலமல்லாத காலத்திலும் இடமல்லாத இடத்திலும் வந்துள்ளான். எனவே, ஐயப்படுதற் குரியவன் என்று வானரத் தலைவர்கள் கூறினார்கள். அனுமன் அவர்கள் கூற்றை மறுதது அவன் வந்த காலமும், இடமும் நன்று என்று இராமபிரானிடம் கூற இராமபிரான் விபீஷணனை அடைக்கலமாக ஏற்றுக்கொண்டார்.

திரௌபதி துச்சாதனனால் இழுத்துவரப்பெற்று சபையில் நிறுத்தப்பட்டாள். அவள் பூப்பெய்திய நிலை. குளித்து ஆசாரத்துடன் கண்ணனை அழைக்கவேண்டுமென்று எண்ணினாள். கண்ணா! மால் வண்ணா! அபயம், அபயம் என்று அழைத்தாள். கண்ணன் துகிலளித்துக் காப்பாற்றினான். இங்கே அதிகாரி நியமமும், பிரகார நியமமும், தேவைப்படவில்லை.

அருச்சுனன் கண்ணபிரானிடம் கீதோபதேசம் கேட்கும்போது இடமும் சூழலும் சரியில்லை. பிரபத்தி நெறியில் நின்று, கண்ணபிரானின் திருவடிகளைப் பற்றி நின்றான். இதிலிருந்து பிரபத்தி நெறியே இடம், காலம், சூழல் எல்லாவற்றையும் அமைத்துக் கொடுக்கும் என்று தெரிகிறது. வனவாச காலத்தில் இராமபிரான் இலக்குவனைத் தங்குவதற்குக் குடிசை அமைக்கச் சொல்லுகிறான். இலக்குவன் "அண்ணா! குடிசை எப்படி அமைக்கவேண்டுமென்று கேட்கிறான். அதற்கு இராமபிரான் உன்னிஷ்டம் போல் அமைத்துவிடு" என்று சொல்கிறான். இலக்குவனின் கண்கள் கலங்குகின்றன. அதைப்பார்த்த இராமபிரான் "தம்பி! உன் கண்கள் கலங்கக் காரணம் என்ன?" என்று கேட்க, இலக்குவன் "அண்ணா! எனக்கு என்று எந்தச் சுதந்திரமும் கிடையாத நிலையில் உன்னிஷ்டம் என்று தாங்கள் சொல்லியதை எண்ணி என் மனமும், கண்களும் கலங்குகின்றன" என்று சொல்லுகிறான். இலக்குவனின் பிரபத்தி நெறியும், கொடிய செயல் செய்த காகாசுரனின் நெறியும், ஆதிமூலமே! என்று அலறிய கஜேந்திரன் என்ற யானையின் நெறியும், கொடிய நஞ்சுகொண்ட காளிங்கன் என்ற அரவின் நெறியும், சரணாகதித் தத்துவத்திற்கு எடுத்துக்காட்டுகளாகத் தெரிகின்றன.

செடியாய வல்வினைகள் தீர்க்கும்
திருமாலே!
நெடியோனே! வேங்கடவா!
நின்கோயில் வாசல்
அடியாரும், வானவரும்
அரம்பையரும் கிடந்தியங்கும்
படியாய்க் கிடந்து உன்பவளவாய்க்
காண்பேனே

என்ற குலசேகர ஆழ்வார் "படியாய்க் கிடந்து" என்ற தொடரால் தனது செயலற்ற சரணாகதி நிலையை எடுத்துக்காட்டுகிறார்.

உலகைப் படைக்கும் நான்முகனும் கண்ணனுடைய காளைகளையும், பசுக்களையும் கன்றுகளையும் ஒழித்து வைத்துப் பின் தவறை உணர்ந்து கண்ணனை வணங்கி நின்றான். கண்ணனின் திருவருள் நான்முகனுக்குக் கிட்டவில்லை. ஆனால் அறிவொன்றுமில்லாத ஆய்க்குலத்துப் பெண்களாகிய கோபியர்களுக்குக் கண்ணபிரானின் அருள் பரிபூரணமாகக் கிட்டுகிறது.

எற்றைக்கும் ஏழேழ்பிறவிக்கும்
உன்றனோடு
உற்றோமேயாவோம் உனக்கே
நாம் ஆட்செய்வோம்

என்று தங்கள் பக்தியின் உறுதிப்பாட்டை வெளிப்படுத்துகிறார்கள்.

## பிரபந்நனின் சிந்தனைகள்

பிரபந்நன் இறைவனைப் பற்றியே சிந்திக்கிறான். அவனுடைய உள்ளம், உரை, செயல் எல்லாம் இறைவனைப் பற்றியதாகவே இருக்கின்றன. தன்னுடைய குறைகளையும் குற்றங்களையும் குணமாகக் கொண்டு தாய் குழந்தையை மன்னிப்பதுபோல் தன்னையும் இறைவன் ஏற்றுக்கொள்வான் என்று இறைவனின் வாத்ஸல்ய குணத்தைப் பற்றிச் சிந்திக்கிறான்.

இறைப்பணி செய்வதற்காகத் தன்னை உடைமையாகக் கொண்டுள்ள சுவாமித்துவத்தைப் பற்றிச் சிந்திக்கிறுன். தன்னிலைக்குத் தாழ்ந்து வந்து தன்னோடு பழகும் சௌசீல்ய குணம் பற்றிச் சிந்திக்கிறுன். பக்தர்கள் தன்னை அணுகி அவர்கள் காரியங்களை நிறைவேற்றிக் கொள்ள ஏதுவாக எளிவந்த சௌலப்ய நிலை பற்றிச் சிந்திக்கிறுன். "வேண்டற்கரியோய் நீ வேண்டமுழுதும் தருவோய் நீ" என்றபடி இறைவனுடைய ஞான நிலை பற்றிச் சிந்திக்கிறுன். பக்தர்களுடைய விருப்பங்களை நிறைவேற்றவல்ல இறைவனின் எல்லையற்ற சக்தியைப் பற்றிச் சிந்திக்கிறுன்.

### முடிவுரை

இவ்வாறு மேற்கூறிய முறைகளையும், வழிகளையும் பின்பற்றி இறைப்பயன் உறுதியாகக் கிட்டுமென்று பிரபந்நன் பிரபத்தி நெறியைப் பின்பற்றி இறைவழிபாட்டினின்று சிறிதும் வழுவாமல் பணி செய்கிறுன் பணி செய்து வாழ்நாளிறுதியில் பூத உடலை விட்டு புகழுடம்பு எய்துகிறுன்.

## தோமாலை சேவை

**தோமாலை சேவை காலை 3.30 மணி முதல் 4-30 வரை நடக்கும். ரூ. 220/- கட்டணம் செலுத்தி டிக்கட் பெற்றுக்கொண்டு இச்சேவையில் கலந்துகொள்ளலாம். முன்னதாக D.D. அனுப்பியும், அல்லது ஒருநாள் முன்னதாக விஜயா வங்கி மூலமும் டிக்கட் பெற்றுக்கொள்ளலாம்.**




## தி.தி. தேவஸ்தானத்தாரின்

# ஸ்ரீபத்மாவதி தாயார் திருக்கோயில்,

## திருச்சானூர்.

### வெள்ளிக்கிழமை நிகழ்ச்சி நிரல்கள்:

**காலை**

| | |
|---|---|
| 5-00 முதல் 5-30 வரை | .... சுப்ரபாதம் |
| 5-30 முதல் 6-30 வரை | .... ஸஹஸ்ரநாம அர்ச்சனை நித்ய அர்ச்சனை, முதல்மணி |
| 6-30 முதல் 7-00 வரை | .... சடலிம்பு |
| 7-00 முதல் 8-00 வரை | ... அபிஷேகம் |
| 8-00 முதல் 9-00 வரை | .... மூலவர்க்கு அலங்காரம இரண்டாவது மணி |
| 9-00 முதல் இரவு 8-00 வரை | .... ஸர்வ தரிசனம் |

**மாலை**

| | |
|---|---|
| 6-00 முதல் 8-00 வரை | .... திருவீதிஉலா மற்றும் ஊஞ்சல் சேவை |

**இரவு**

| | |
|---|---|
| 8-00 முதல் 8-30 வரை | .... இரவு கைங்கர்யம், இரவு மணி |
| 8-30 முதல் 9-00 வரை | .... ஸர்வ தரிசனம் |
| 9-00 மணிக்கு | .... சுத்தி, ஏகாந்த சேவை |

### அபிஷேகம்

**மாலை**

| | |
|---|---|
| 7-00 முதல் 8-00 வரை | .... அபிஷேகம். நபர் ஒருவர் ரூ. 100/- செலுத்தி பங்கேற்கலாம ரூ. 5/- நபர் ஒருவர் செலுத்தி அபிஷேக தரிசனம்' காணலாம். |

திருப்பதியிலிருந்து 5 கி.மீ. தொலைவிலுள்ள திருச்சானூருக்குப் போய்வர பேருந்து வசதிகள் உண்டு.

# மணிமங்கலம் ஸ்ரீராஜகோபால சுவாமி

திருமதி. எஸ். வசந்தி - சென்னை.

சென்னையிலிருந்து காஞ்சிபுரம் செல்லும் வழியில் சுமார் 30 கி.மீ. தொலைவில் காஞ்சிக்கு நுழைவு வாயிலாக இருக்கும் மணிமங்கலம், கிராமங்களில் மணி போன்றது என்றபொருள்படும்படி, வடமொழியில் இரத்தின கிராமம் எனவும், இரத்தின கிருஹம் எனவும், கிராம சிகாமணி எனவும் பலப் பெயர்களால் வழங்கப்பட்டிருந்தது. கி.பி. ஏழாம் நூற்ருண்டில் அதாவது பல்லவர் ஆட்சியில் மணிமங்கலம் என்று இவ்வூருக்குப் பெயர் வழங்கப் பட்டிருந்தது. இதனைக் கூரம் செப்பேட்டின் மூலம் தெரிநது கொள்ள முடிகிறது.

இராஜ கோபால சுவாமி கோயிலில் 18 கல்வெட்டுக்கள் உள்ளன. இவை 10ஆம் நூற்ருண்டு முதல் கி.பி. 16ஆம் நூற்ருண்டு வரையிலான காலக்கட்டத்தைச் சேர்ந்தவை. இந்த கல்வெட்டுக்கள் பெரும்பாலும் கோயிலுக்கு வழங்கப்பட்ட பல்வேறு தானங்களைப் பற்றியும் அவற்றைக் கொண்டு நடத்தப்பெறும் வழிபாடுகள் பற்றியுமேக் குறிப்பிடுவன.

தமிழகத்திலே கிருஷ்ணபிரானுக்கு எனக் கோயில்கள், நாகை காயிதே மில்லத் மாவட்டத்தில், மன்னார்குடியில் இருக்கும் இராஜகோபால சுவாமி கோயில், திருநெல்வேலியில் மன்னார்கோயில், விழுப்புரம் இராமசாமி படையாச்சியார் மாவட்டத்தில் உள்ள இராஜ மன்னார்குடி மற்றும் மணிமங்கலத்தில் உள்ள இராஜகோபால சுவாமி திருக்கோயில்களாகும்.

### மணிமங்கலத்து இறைவன் திருப்பெயர்கள்:

துவாரகையின் அரசன் என்ற



பொருளில் ஸ்ரீதுவாரகபுரி தேவன் என்று சமஸ்கிருதத்தி லும், தமிழில் வண்துவாராபதி எனவும், ஸ்ரீகாமகோடி விண்ண கர் ஆழ்வார் என்றும், திரு வாய்க்குலம் (திரு ஆயர்குலத் துப்பெருமான் என்பதன் திரிபு) என்றும் இந்தக் கோயில் இறை வன் பலவாறு அழைக்கப்பட் டுள்ளான்.

## கல்வெட்டின் வழிச்செய்திகள்:

இரண்டாம் இராஜேந்திரனின் (கி.பி. 1055) படைத்தலைவன், ஜெயம்கொண்ட சோழ பிரம் மாதிராஜன், இவனது தாயார் காமக்குவையாள், மணிமங்கலத் திலிருந்தும், அதன் அருகில் உள்ள அமண்பாக்கம் என்ற இடத்திலிருந்தும், 4000 குழி நிலத்தை வாங்கி அந்நிலத்தை இந்த கோயிலுக்கு தானமாக அளித்துள்ளாள். வீர ராஜேந் திரனின் (கி.பி. 1068) ஐந் தாம் ஆட்சியாண்டில் இதே படைத்தலைவன் 4450 குழி நிலத்தை இக்கோயிலுக்கு தான மளித்துள்ளான். இத்தானத்திற் கான நிலத்தை இவனது தந் தையார் மஞ்சிப்பய்யனார் என் னும் ஜெயசிம்ம குலாந் தக பிரம்மராயன், மணிமங்க லத்திலிருந்தே வாங்கியுள்ளார். இக்கல்வெட்டின் மூலம் ஜெய சிம்ம குலாந்தக பிரம்மராய னும் ஒரு படைத்தலைவன் என்பதும் இவர்களது சொந்த ஊர் மணிமங்கலம் என்பது தெரியவருகிறது. இதனால், சோழ நாட்டின் படைத்தலை வனைப் படைத்த ஊராக மணி மங்கலம் இருந்துள்ளது. மாதந் தோறும் அமாவாசை தினத் தன்று இந்தக் கோயில் இறை வனின் திருவுருவை ஊர்வ லமாக எடுத்துச் செல்ல முத லாம் குலோத்துங்கன் என்ற



சோழ அரசனின் 48ஆவது (கி.பி. 1118) ஆட்சியாண் டில், அதாவது கி.பி. 12ஆம் நூற்றுண்டில் 1050 குழிநிலத் திலிருந்து வரும் வருவாயைப் பயன்படுத்த ஏற்பாடு செய் யப்பட்டுள்ளது. வண்டு வாரா பதி கோயில் இறைவன் 'திரு வாயக் குலத்தாழ்வார் அவத ரித்த ரோகினி நட்சத்திர நாள் அன்று திருமஞ்சன நீராட் டுக்கும் இறைவனுக்கு அமுது செய்வதற்கும், விக்கிரம சோழ னின் நான்காவது ஆட்சி யாண்டில் நிலம் கொடையளிக் கப்பட்டுள்ளது. இதே மன்ன னின் 15ஆம் ஆட்சியாண்டில் வழங்கப்பட்ட 250 குழி நிலதா னம் இரண்டாம் குலோத்துங்க னின் 8ஆவது ஆட்சியாண்டில் தான் தானம் அளிக்கப்பட்டுள் ளது.

இரண்டாவது இராஜராஜ னின் (கி.பி. 1158) 8-வது ஆட் சியாண்டில் சிறுகாலை சந் திக்கும், திருப்போனகம் அமுது செய்தருளவும் 4 நாழி (நாழி ஓர் அளவு) அரசி தானமாக அளிக்கப்பட்டுள்ளது. மூன்றும் குலோத்துங்கன் (கி.பி. 1178-1217) காலதத்தில் 4 நாழி அரிசி அமுது செய்ய 600 குழி நிலம் அளிக்கப்பட்டுள் ளது. இதே மன்னனின் 28வது ஆட்சியாண்டில் 'திரு வாய்ப்பாடி' என்று பெயரி டப்பட்டு தானமளிக்கப்பட்டுள் ளது. மூன்றும் இராஜராஜ னின் (கி.பி. 1216) காலத் தில் கோயிலில் இரவு சந்தி விளக்கெரிக்கப் பணம் வழங் கப்பட்டுள்ளது. இந்தக் கோயி லில் இருந்த அபிஷேக மண்ட பத்தின் அடிப்பகுதியில் புலிமு கத்துடன் கூடிய படிகற்களை மணிமங்கலத்துடையான் பஞ்ச நதி இலட்சுமணன் மலைக்கு இனிய நின்றுன் பெரிய பிள் ளையும், இவன் தம்பி ஆகவ மல்லதேவன் ஆகிய இருவரும் அமைத்துள்ளனர். எனவே, அபி ஷேக மண்டபம் கி.பி. 13ஆம் நூற்றுண்டிற்கு முன்பே இருந் துள்ளது. இதற்கு . கி.பி. 13ஆம் நூற்றுண்டில் படிகட்டு கள் அமைக்கப்பட்டன எனத் தெரிகிறது. மற்றொரு கல் வெட்டி ல் 'மன்னார்' என வழங் கப்பட்ட இறைவன் திருமுன்பும், இதே கோயிலில் எழுந்தருளி இருக்கும் சிங்கப்பெருமாள் (நர சிம்மர்) திருமுன்பும் திருவிளக்கு ஏற்றப்பட்ட செய்தியும் காணப் படுகிறது. இந்த கல்வெட்டுக் கள் அனைத்தின் மூலம், இந் தக் கோயில் சோழ மன்னர்க ளால் போற்றப்பட்டதால் அவர் கள் அனைவராலும் தானங்கள் பல வழங்கப்பட்டுள்ளமை தெரி கிறது.

## மணிமங்கலம் இருந்த நாட்டுப்பிரிவு:

மணிமங்கலம் கிராமம் கி.பி. 11ஆம் நூற்றுண்டிற்கு முன்னர்

செங்காட்டுக் கோட்டித்து மாக னூர் நாட்டில இருந்து வந்துள்ளது. ஆனால், இவ்வூர் பின்னர் ஜெயம்கொண்ட சோழ மண்டலத்தில் புலியூர் கோட்டத்தில் ஸ்ரீகுன்றத்தூர் நாடு என்ற பெரிய நிர்வாக அமைப்பின் கீழ் மாற்றப்பட்டுள்ளது. எனவே, இப்போது போலவே அப்போதும் நிர்வாக வசதிக்காக ஊர்களை ஒரு நாட்டுப் பிரிவிலிருந்து வேறு ஒரு நாட்டுப்பிரிவிற்கு மாற்றம் செய்துள்ளனர்.

### மணிமங்கலத்திற்கு வழங்கப்பட்ட பெயர்கள்:

மணிமங்கலம் சோழ மன்னன் முதலாம் இராஜராஜன் காலத்தில், அவனது மனைவி உலக மாதேவியின் பெயரால் உலக மாதேவி சதுர்வேதி மங்கலம் என வழங்கப்பட்டுள்ளது. பின்னர், முதலாம் இராஜதிராஜன் காலத்தில் இராஜ சூளாமணிச்சதுர்வேதி மங்கலம் எனவும், கி.பி. 11ஆம் நூற்றுண்டில் 'பாண்டியனை இருமுடி வென்று கொண்ட சோழச் சதுர்வேதி மங்கலம்' எனவும், இவனது பாண்டிய வெற்றியைக் குறிக்கும் வகையில் பெயர் மாற்றம் செய்யப்பட்டது. மூன்றும் இராஜராஜன் காலத்தில் கிராம சிகாமணி சதுர்வேதி மங்கலம் எனவும் வழங்கப்பட்டது.

இந்த செய்திகளைக் கல்வெட்டுக்களின் மூலம் அறியும் போது ஒவ்வொரு காலக்கட்டத்திலும் இவ்வூருக்குப் பல வேறு பெயர்கள் வழங்கப்பட்டுள்ளதையும், வரலாற்றில் இவ்வூர் முக்கிய இடம் வகித்ததையும் அறிய முடிகிறது.

### கோயில் அமைப்பு:

கருவரையும், அர்த்த மண்டபமும், முன் மண்டபமும் கொண்ட கோயில் கருவறையைச் சுற்றி, தெற்கில் தும்பிக்கை ஆழ்வாரும், விஷ்ணுவும், மேற்கில் வைகுண்ட நாதமும் தெற்கில் விஷ்ணு துர்கையும் காணப்படுகின்றன.

நம் முன்னோர் விட்டுச் சென்ற திருப்பணிகளைத் தொடர்ந்து மேற்கொண்டு நம் ஆலயங்கள் சீரழியாமல் நாம் போற்றிக் காக்க வேண்டாமா?

***

## விண்ணப்பம்

**திருப்பதியிலுள்ள திருமலை திருப்பதி தேவஸ்தானத்தின் தங்கு வசதிகளுக்காக முன் கூட்டியே செய்து கொள்ளும் இட ஒதுக்கீடுகளுக்கான தொகையினை எம்.ஓ. மூலம் அனுப்புதலைவிட அத்தொகைக்கான வங்கி காசோலையை 'உதவி செயலாட்சிச் தலைவர் (வரவேற்பு) தி.தி. தேவஸ்தானம், திருப்பதி' அல்லது 'செயலாட்சித் தலைவர், தி.தி. தேவஸ்தானம், திருப்பதி' எனும் பெயரில் எடுக்கப்பட்டு, வருகை புரியும் நாள், வரும் நபர்களின் எண்ணிக்கை ஆகியவை கொண்ட முழுத்தகவல்களுடன் கூடிய கடிதத்துடன் ஆங்கிலத்தில்) அனுப்புதல் விரைவான பயனைத்தரும்.**

## விண்ணப்பம்

**தி.தி. தே ..ஸ்தான கோயில்களில் மற்றும் திருமலை ஸ்ரீவேங்கடேஸ்வரர் கோயிலில் நடைபெறும ஆர்ஜித ஸேவைகளுக்காக அனுப்பப்படும் கட்டணத்தொகையினை தேசியமயமாக்கப்பட்ட வங்கிகளில் மட்டுமே பெறப்பட்ட 'டிமாண்ட் டிராப்ட்' D.D. அல்லது 'பேஆர்டர்' (Pay order) மூலமாக அனுப்புமாறு பக்தர்கள் கேட்டுக்கொள்ளப்படுகிறுர்கள். 'செக்' (Cheque)குகளை அனுப்புவதால் கால விரயமும், நிர்வாகச் சிக்கலும் மேலாண்மைக்கு ஏற்படுகின்றது என்பதைத் தெரிவித்துக்கொள்கிறோம்.**

**செயலாட்சித் தலைவர்,**
**தி.தி. தேவஸ்தானம், திருப்பதி.**

# திருமலை திருப்பதி தேவஸ்தானம், திருப்பதி.

## திருமலையில் தங்குவசதி விவரங்கள்

### ஸ்ரீ பத்மாவதி விருந்தினர் விடுதி மைய பரப்பு

| விடுதி மற்றும் குடில்கள் பெயர்கள் | கட்டணம் (நாள் ஒன்றிற்கு) |
|---|---|
| ஆம்ப்ரோ விருந்தினர் விடுதி | |
| (அ) பெரிய அறைத்தொகுதிகள் | |
| ஒவ்வொன்றும் இரண்டு ... | 1000-00 |
| (ஆ) சிறிய அறைத்தொகுதி-ஒன்று ... | 500-00 |
| பால குடீரம் | |
| (6 அறைத்தொகுதிகள்) ஒன்று ... | 500-00 |
| கோதாவரி சதன் | |
| (3 அறைகள்) ஒவ்வொன்றும் ... | 500-00 |
| கும்ப்ளே விருந்தினர் விடுதி | |
| (4 அறைத்தொகுதிகள்)ஒவ்வொன்றும் ... | 250-00 |
| கோகுலம் விருந்தினர் விடுதி | |
| (4 அறைத்தொகுதிகள்)ஒவ்வொன்றும் ... | 1000-00 |
| எச்.ஆர்.ஜி. | |
| (ஏ மற்றும் பி பகுதிகள்) ... | 400-00 |
| ஹரிசதன் விருந்தினர் விடுதி | |
| (குளிர்சாதன வசதிகொண்டது) | |
| (அறைத்தொகுதி(1 to 7) ஒவ்வொன்றும்).. | 1000-00 |
| ஹில் வ்யூ விருந்தினர் விடுதிகள்... | 100-00 |
| (பெரிய அறைத்தொகுதிகள்) | |
| ஹில் வ்யூ விருந்தினர் விடுதிகள் (சிறிய... | 50-00 |
| அறைத்தொகுதிகள்) | |
| ஹில் வ்யூ சொகுசு குடில்கள் ... | 100-00 |
| இந்திரா விருந்தினர் விடுதி | |
| (4 அறைத்தொகுதிகள்)ஒவ்வொன்றும் ... | 500-00 |
| ஜகன்னாத பவன் ... | 500-00 |
| (4 அறைத்தொகுதிகள்)ஒவ்வொன்றும் | |
| மோடி பவன் | |
| (8 அறைத்தொகுதிகள்)ஒவ்வொன்றும் ... | 250-00 |
| நாராயணகிரி விருந்தினர் விடுதி I ... | 100-00 |
| (அ) மூலை அறைத்தொகுதி ... | 150-00 |
| நாராயணகிரி விருந்தினர் விடுதி II ... | 100-00 |
| (அ) மூலை அறைத்தொகுதி ... | 150-00 |
| நாராயணகிரி விருந்தினர் விடுதி III ... | 100-00 |
| (அ) மூலை அறைத்தொகுதி ... | 150-00 |
| நாராயணகிரி குடில்கள் | |
| (17 அறைத்தொகுதிகள்)ஒவ்வொன்றும் ... | 400-00 |
| ராம் பகிச்சா விருந்தினர் விடுதி I ... | 100-00 |
| ராம் பகிச்சா விருந்தினர் விடுதி II ... | 100-00 |
| ராம் பகிச்சா விருந்தினர் விடுதி III ... | 100-00 |
| ஸ்ரீ பத்மாவதி விருந்தினர் விடுதி | |
| (பிரதானமானது) | |
| (அ) பெரிய அறைத்தொகுதிகள் | |
| ஒவ்வொன்றும் இரண்டு ... | 1500-00 |
| (ஆ) மற்றைய 7 அறைத்தொகுதிகள் | |
| ஒவ்வொன்றும் ... | 1500-00 |
| ஸ்ரீ லக்ஷ்மி நிலையம் | |
| (3 அறைத்தொகுதிகள்) ஒவ்வொன்றும்... | 500-00 |
| ஸ்ரீ நிகேதன் | |
| (3 அறைகள்) ஒவ்வொன்றும் ... | 1000-00 |
| ஸ்ரீ நிவாசா நிலையம் | |
| (5 அறைகள்) ஒவ்வொன்றும் ... | 500-00 |
| சாந்தி சதன் | |
| (7 அறைத்தொகுதிகள்) ஒவ்வொன்றும்... | 500-00 |
| சிறப்பமைப்பு குடில்கள் ... | 400-00 |
| எஸ்.வி. விருந்தினர் விடுதி ... | 100-00 |
| (அ) மூலை அறைத்தொகுதி ... | 150-00 |
| ஸ்ரீவாரி குடீர் விருந்தினர் விடுதி ... | 2000-00 |
| (குளிர்சாதன வசதி கொண்டது) | |
| (அறைத்தொகுதி ஒன்று முதல் 4 வரை முழு விருந்தினர் விடுதியும்) | |
| சுராபுரம் தோட்டம் குடில்கள் | 250-00 |
| சேஷாத்ரிநகர் விருந்தினர் விடுதி ... | 100-00 |
| வித்யாசதன் பெரிய அறைத் | |
| தொகுதி (ஒன்று) ... | 1500-00 |
| (அ) மற்றைய அறைத்தொகுதிகள் ... | 500-00 |
| (4 அறைத்தொகுதிகள்)ஒவ்வொன்றும் | |
| வராஹசுவாமி விருந்தினர் விடுதி ... | 100-00 |
| **டி.பி. குடில்கள்** | |
| (2 அறைத்தொகுதிகள்)ஒவ்வொன்றும் ... | 150-00 |
| தனி அறை ... | 30-00 |
| வெளிப்புற குடில்கள் ... | 75-00 |
| டி.பி.சி.யில் சிறப்பமைப்பு குடில்கள் | |
| (அ) குடில் எண்கள்61 A, B | |
| (குடில்களுக்கு உள்ளே) ... | 400-00 |
| (ஆ) 57, 58, 60 A, B ... | 400-00 |
| (இ) 62A, B; 64Q, A, B; 65, | |
| A, B; 66, 67 69 A,B ... | 400-00 |
| மங்களகிணறு குடில்கள்(எம்.பி.சி.) ... | 75-00 |
| (அ) (2 அறைத்தொகுதிகள்) | |
| ஒவ்வொன்றும் ... | 150-00 |
| முழு குடில் எண். 31, A,B; 31 C,D; ... | 150-00 |
| வேலி வ்யூ குடில் (வி.வி.சி.) ... | 75-00 |
| (3 அறைத்தொகுதிகள்) | |
| ஒவ்வொன்றும் 44 AB; 47 AB; 50 AB ... | 150-00 |
| ஆழ்வார் ஏரி குடில்கள் (ஏ.டி.சி.) ... | 50-00 |
| ஏ.டி.சி. தனியறை (ஒவ்வொன்றும்) ... | 30-00 |
| அஞ்ஜனாத்ரி நகர் குடில்(ஏ.என்.சி.) ... | 15-00 |
| கருடாத்ரி நகர் குடில்(ஜி.என்.சி.) ... | 15-00 |
| சங்குமிட்டா குடில்கள்(எஸ்.எம்.சி.) ... | 15-00 |
| சேஷாத்ரிநகர் குடில்கள்(எஸ்.என்.சி.) ... | 15-00 |
| ஹில்வ்யூ குடில்கள் | |
| (சாதாரணமானவை) ... | 15-00 |

(திருமலையில் தங்குவசதி கோரும் யாத்திரிகர்கள் ரூ 100/-ஐ "Assistant Executive Officer, (Reception I) T.T.D., Tirumala" எனும் பெயரில் ஒரு வங்கி காசோலை மூலமாக, தங்கும் தேதி பற்றிய ஆங்கிலத்தில் எழுதப் பட்ட விவரங்களுடன்; மேற்குறிப்பிட்ட முகவரிக்கு 30 நாட்களுக்கு முன்பேயே அனுப்புதல் வேண்டும்.)

(தொடர் கட்டுரை)

# வைணவ வழக்குச்சொற்களும் பொருள்களும்

டாக்டர். மா. வரதராஜன் - திருப்பதி.

## பு

புலன்கெழுகோவியர் - கெழுமை-சேருகை, இந்திரயங்களைப் பிணிக்கும் ஆய்ப்பெண்கள்

புலன்கொள் மாண் - அழகான வாமனன்

புலாகின்ற - வெறிநாற்றம் வீசுகின்ற

புலால் வெள்ளம் - இரத்த வெள்ளம்

புலாநின்றேன் - விடியுமளவும் நின்றேன்

புலாவுகை - ஒலிக்கை, பிரகாசிக்கை

புலிமுகம் - உயர்ந்த நெற்றி

புலியினதள் - புலித்தோல்

புலையறம் - நீசதர்மம்

புவனி - பூமி

புவி - பூமிப்பிராட்டி

புவிக்கும்புலி - பூமியிலுள்ளாரக்கு இடம்

புவியினார - பூமியிலுள்ளார்

புழுகுநெய் - புனுகுத்தைலம்; புனுகு எண்ணெய் புனுகுப்பூனையின் பீஜத்தை ஊற வைத்து வாட்டி எடுக்கும் தைலம்

புழுவன் - கிருமிகண்ட சோழன், கழுத்தில புழுத்து செத்தவனாகையாலே இப்படிப் போயிற்று

புழை - துவாரம்

புள் - கருடன்; பறவை

புள்ளம்பூதங்குடி - திவ்ய தேசம் திருமங்கையாழ்வார பாடிய திருத்தலம்

புள்ளறையன் - பக்ஷிராஜன்; கருடன்

புள்ளரையன் கோயில் - கருடனுககுக் கோவான எம்பெருமானுடைய கோயில்

புள்ளார்புறவில் - அன்னம் முதலான பறவைகள் நிறைந்த பக்கபூமிகள்

புள்ளாளன் - கருடனை ஆட்கொள்ளுகிறவன்; திருமால்

புள்ளிகுத்துவது - வேண்டாத அம்சம் என்று காட்டுவதற்காக சுழிப்பது

புள்ளுவன் - வஞ்சகம்

புள்ளுவம் பேசுதல் - வஞ்சகமாக பேசுதல்

புள்ளைக்கடா கின்றவாற்றை - பெரிய திருவடியை நடத்துகிற விதத்தை

புளி புளிங்குடி - திருப்புளிங்குடி என்னும் திவ்யதேசம் ஸ்ரீவைகுண்டத்திலிருந்து இரண்டு கல தொலைவில் உள்ளது

புளிப்பழம - புளிப்புச்சுவையையுடைய ஒருவகையான பழம்

புளியட்டி - புளிப்பழத்தைக் கொண்டு நீராட்டி

புற்கவ்வப் பணணுதல் - அபிமானம் இல்லாமலே பண்ணுதல்-தோற்றவன் ஆயுதத்தை எறிந்து புல்லைக்கவ்வும் படி பண்ணுதல் தோல்விக்கு அறிகுறியான தொழில் இது. மண்ணைக்கவ்வுதல் என்பது போல

புற்கு - புன்மை

புற்பா - பா-வஸ்து, புல்லாகிற வஸ்து; பா என்று பரவுதலாய் படருகிற புல்; பசுவினால்கூட கவ்வமுடியாதபடி தரையோடு தரையாகப் படரும் பயனற்ற வஸ்து

புற்றுமறிந்தன - புற்றும் சிதைந்தன; புற்றை வெட்டித்திருப்பினால் புரைபுரையாய் தோற்றுவன, புரை-பாழி

புற்றறவல்குல் - புற்றிலே வளருவதால் ஒளியுள்ள அரவு-பாம்பு, அதன் பணம். அதுபோல பாம்பின் புஷ்டியாயுள்ள நிதம்பப் பிரதேசம்

புறக்கடல் - புறம்பான கடல்

புறக்கிட - புறங்காட்ட

புறங்காட்டுகை - முதுகு காட்டுகை; தோற்று ஓடுகை

புறஞ்செயல் - முன்பு செய்யும் காரியம், ராமாவதாரத்துக்கு முன்னுதவியாக வானவர்கள் பிறந்தது புறஞ்செயல்

புறம்சுவர் கோலம் செய்தல் - உடலை அலங்கரித்தல்

புறஞ்சூழ்காத்தல் - வெளியே சுற்றிலும் பாதுகாத்தல்

புறணி - பயனற்றது

புறத்தனன் - கிட்டமுடியாதபடியிருப்பவன்

புறத்திட்டு - புறம்பாக்கி; அகற்றி; தள்ளிவிட்டு

| | | |
|---|---|---|
| புறநெறி | | அல்லாதவழி; இந்திரிய வழி |
| புறப்படுதல் | - | வெளிப்படுதல் |
| புறப்படைவீடு | - | பெரிய ராஜதாநி |
| புறப்பாடின்றி | - | வெளிப்படாதபடி |
| புறப்பூச்சு | - | மேல்பூச்சு |
| புறம்பலபேசுவ | - | புறம்பேசுவபல, வெளியில் இருப்பார் பேசுகிற குற்றங் கள் பல. |
| புறம்புல்குதல் | - | முதுகைக்கட்டிக் கொள்ளு தல் |
| புறம்புல்கிய சொல் | - | முதுகுதழுவியது பற்றிய பாட்டு |
| புறம்புற்றை திருப்பதிகள் | - | புறமபுற்ற என்பதே புறம் புற்றை, மற்ற என்பது மற்றை என்னுமாபோலே, புறம்புள்ள திருப்பதிகள் என்று பொருள் |
| புறம்போலுள்ளும் கரியான் | - | அகவாய் ஒருபடியாய் புற வாய் ஒருபடியாய் இரா மல், உள்ளும்புறமும் ஏக ரூபமாயிருக்கிறவன். உடம் புபோல உள்ளமும் ஒத்தி ருப்பவன். |
| புறமலை | - | திருமலைக்குப புறம்பான மலை. |
| புறமடக்கி | - | குயவன் பானையைத் தட் டும் கட்டை |
| புறமறக்கட்டி | - | நுனி தெரியாதபடி உள் முடியாக முடிந்து; பந்தம் அறுந்துவிட முடியாதபடி கட்டி |
| புறமாலை | - | மேல்மாலை; வெளிமாலை |
| புறமேவந்து நின்றீர் | - | பின்னால்வந்து நின்றீர் |
| புறவடி | - | புறங்கால் |
| புறவம் | - | புறு; மாடப்புறு |
| புறவண்டம் | - | பகிரண்டம் |
| புறவில் | - | ஊரைச்சூழ்ந்த சுடுகாடு; பூமரங்கள்; தோப்பு. |
| புறவிதழ் | - | வெளிவேலை |
| புறவீடு | - | பிரயாணத்துக்குமுன்பு வேறு வீட்டிலே இருக்கை |
| புறவெள்ளமிடுதல் | - | வழிந்தோடுதல் |
| புறனுரை | - | ஆதாரமற்ற சொல்; புலவிய சொல் |
| புன்கண்மை | - | கண் கலககம் |
| புன்சடை | - | விகாரமான சடை |
| புன்செக்கர் | - | மறைகிற செவ்வானம் |
| புன்சொல் | - | பழிப்பு வார்த்தை |
| புன்புலவழி | - | அற்பமான சப்தாதி விஷ யங்களில் ஐம்பொறிகள் செல்லுவதற்குரிய வழி |
| புன்முறுவல் | - | சிறுநகை |
| புன்மை | - | துக்கம்; தண்மை; வேறு விஷயத்தில் ஆசை |
| புன்மையாளன் | - | நீசன் |
| புனக்கொள் காயா | - | தன்னிடத்திலே நிலையை யுடைய காயாமலர் |
| புனக்கேழல | - | நிலத்திலே இருக்கும் வரா கம் |
| புனத்துழாய் | - | தன்னிலத்துள்ள திருத்து ழாய் |
| புனம் | - | விளைநிலம் |
| புனமயில் | - | தனனிலத்திலுள்ள மயில் போன்ற அளகபாரத்தை உடையவள் |
| புனமேய்கின்ற மான் | - | விளைநிலத்தை அழித்து மேய்கின்றமான் |
| புனமேயதண்கு ழாய் | - | தன்னிலத்தில் பொருந்திய குளிர்ந்த திருத்துழாய் |
| புனல்குன்று | - | அருவியையுடைய மலை |
| புனல்தருபுணரச்சி | - | நீரிலே அமிழ்ந்து போகிற தன்னை நாயகன் உதவி செய்து எடுத்தால், அதுக் குத் தோற்று ஆபத்திலே காப்பதே என்று தழுவிக் கொள்ளுகை |
| புனல்படப்பை | - | நீர்நிலம்; நீரையுடைய நிலம் |
| புனலா | - | நீராம்படி |
| புனலுரு | - | நீரபோலே மிகவும் சுலபன் |
| புனவரை | - | சிறுமலை; புனம்-கொல்லை அங்குள்ளவரை |
| புனவேங்கை | - | புனத்திலுண்டான வேங்கை, காட்டு வேம்பு |
| புனிதன் | - | தூயவன் |
| புனிதவிருக்கு | - | புனிதமான ருக்கு, புருஷ ஸூக்தலம் முதலானவை |
| புனிதீர் | - | தூய்மையையுடையவரே |
| புனைபூங்கழலாடி | - | புனைந்தபூவையும் வீரக்க ழலையுடைய திருவடி |
| புனைதல் | - | சூடுதல் |
| புனை | - | புன்னைமரம் |
| புனைவு | - | சேர்க்கை |

(தொடரும்)



# காப்பு மறந்தறியேன் கண்ணனே என்றிருப்பன்

'கண்ணபுரத்தான்'

'தலைவி! உன்னைப் பிரிந்தேன் என்று இப்படி வருந்துகிறுயே! உன்னைப் பிரிந்தது ஏதோ உண்மைதான் எத்தனை கடமைகள் எனக்கு அங்கு இருந்தன. எத்தனைப் பொறுப்புக்களை மன்னன் நம்பி என்னிடம் ஒப்படைத்தான். அத்தனைக்கும் இடையில் உன்னை அடிக்கடி நினைத்துக்கொள்வேன்! என்று பிரிந்து மீண்ட தலைவன் தன் தலைவியைத் தேற்றினான்.

இந்தத் தேறுதல் சொற்களைக் கேட்ட உடனே தலைவி முன்னினும் அதிகமாக வருந்தினாள். 'பிரியேன், பிரிந்தால் தரியேன்' - என்று அன்று என் கை பற்றியபோது வாக்களித்தீர்கள். ஆனால் பிரிந்து போனீர்கள் பிரிந்தாலும் என்னையே எப்போதும் நினைந்துக் கொண்டிருப்பீர்கள் என்று கருதி ஒருவாறு என் கவலையை மறந்திருந்தேன். இப்போது என்னை உங்கள் வேலையில் மறந்துவிட்டதாகக் கூறுகிறீர். அவ்வப்போது நினைத்துக்கொண்டதாகக் கூறுகிறீர். இதுதான் என்பால் நீங்கள் வைத்த அன்பா. அந்த நாள் அன்பு பேரன்பு, என்னையே நினைந்த நிறை அன்பு. அது இன்று எங்கே? என்று கண்ணீரை நீர்கொண்டனள்.

சாதாரண மனிதன் இன்னொரு பொருளிடம், உயிரிடம் கொள்ளும் அன்பு, காலத்தால், இடத்தால், செயலால் கட்டுப்பட்டது. ஆனால் அடியார் ஆண்டவனிடம் கொள்ளும் அன்போ நெய்யொழுக்குப் போன்று தொடர்ந்து நிலவுவது. அதிலும் ஆழ்வார் கண்ணனிடம் கொண்ட அன்போ தாயன்பு, சேய் அன்பு, தொண்டன் அன்பு, தலைவி அன்பு தன்னை முழுவதும் ஒப்படைத்த, தனக்கு முழுவதும் அவனே என்று கருதும் அடைக்கல அன்பு சரணுகதி அன்பு. எனவே ஒருகால் மறக்கவும் ஒருகால் நினைக்கவும் அந்த அன்பு பொறுப்பதில்லை. இடையீடின்றி என்றும் நெஞ்சில்



நினைந்துகொண்டே, வாயில் சொல்லிக்கொண்டே, கையில் அவன் கைங்கர்யம் செய்துகொண்டே இருப்பது அந்த அன்பு. அதானால்தான் ஆழ்வார் 'மறந்தறியேன்' என்கிறுர்.

கடலிலிருந்து மேகமாய் எழுந்து, மழையாய்ப் பொழிந்து, அருவியாய், ஆறுய், ஏரியாய், குளமாய், குட்டையாய்ச் சிதறிப்போன நீர் என்று மீண்டும் கடலைச் சென்று சேர்கிறதோ அப்போதே அது முழு நிறைவு அடைகிறது. அந்த உறவு, கடலுக்கும் நீருக்கும் உள்ள உறவு அடிப்படையானது. சென்று சேரும் நெறி பல ஆகலாம். காலம் பல ஆகலாம்; நிறம்பல ஆகலாம். ஆனால் எங்கிருந்தாலும் எந்த நிலையில் இருந்தாலும் கடலைச்சென்று சேரந்து அதனுடன் ஒன்றிப் போவதே பிரிந்த நீருக்கு முக்தி. பெரும்பேறு அழியாநிலை.

அப்படித்தான் இந்த மானுடமும் ஒரு பெரும் பொருளிலிருந்து, அதன் விருப்பிற்கு ஏற்பப் பிரிந்துவந்து மண்ணுலகில் ஆண், பெண், எனப்பிறவி எடுக்கிறது. இந்தப் பிறவியில் இந்த உலகச் சூழலில் தான் தோன்றிய இடத்தை தன்னைத் தோற்றுவித்த பொருளை உயிர்கள் மறந்துவிடுகின்றன; சில அவ்வப்போது நினைவு கூர்கின்றன. ஆனால் ஆழ்வார்கள், நாயன்மார்கள் தாம் வந்த வரலாற்றை மறந்துவிடுவதில்லை

- வந்த நோக்கத்தை மறந்துவிடுவதில்லை. தான் யார், தன் தலைவன் யார், தன்பணி யாது - என்ற தெளிவு அவர்க்கு வாய்க்கிறது. அதனால் அவனை அவர்கள் மறந்தறியாதவர்கள் ஆகின்றனர். எப்போதும் சிந்தித்துக்கொண்டே இருக்கிறார்கள். உண்ணுஞ்சோறு, தின்னும் வெற்றிலை, பருகும் நீர் எல்லாம் அவர்களுக்குக் கண்ணனே அவனை விட்டால் கதி தான் எது எனவேதான் ஆழ்வார் 'காப்பு மறந்தறியேன்' என்கிறார்.

தாய் ஒருத்தி குழந்தையை அடிக்கும்போது அந்தக் குழந்தை தன் காப்புக்காக வேறு யாரையும் கூவி அழைப்பதில்லை. அவள் அடிக்க அடிக்க 'அம்மா! அம்மா!! என்று குழைந்து கத்தி அழுது அவள் அன்பையே அரவணைப்பையே பெறத்துடிக்கும்...

*அரிசினத்தால் ஈன்றதாய்*
*அகற்றிடினும் மற்றவள்தன்*
*அருள் நினைந்தே அழுங்குழவி*
*அதுவே போன்று*

அடியார் ஆண்டவனையே சார்ந்து இருப்பர்.

காப்புகள் பல. முதலில் தாயின் காப்பு குழந்தையைக் காத்து வளர்க்கிறது. வளர்ந்த பெண் காதல் கொண்டு கண்ணலனை மணந்துகொள்கிறாள். அவன் அப்போது அவருக்குக் காப்பாகத் திகழ்கிறான். அவன் அப்படி இப்படிச் சிறிது தாறுமாறாக நடந்துகொண்டாலும் கொண்ட தன் கணவனை அன்றிப் பிறர் உதவியை நாடாமைக்குல மகளிர் இயல்பு. அத்தகு குலமகளிர் போல அடியவனும் ஆண்டவனுக்கு ஆட்படுகிறான்.

*கண்டார் இகழ்வனவே காதலன்*
*தான் செய்திடினும்*
*கொண்டானை அல்லால்*
*அறியாக் குலமகளாக*

அவன் கண்ணனே காப்பு என்றிருக்கிறான்.

குடிகாத்து ஓம்பல் கோலோன், மன்னன், தலைவன் இயல்பு. அந்த மன்னனையே கதி என அவன் ஆட்சியின் கீழ்வாழும் குடி நலம்பல பெறுகிறது. ஆயினும் எல்லாக் குடிமக்களையும் பொதுவாகப் பார்க்கும் ஒரு தலைவன் தன்தனித்துயரத்தையும் கண்டு களையவில்லையே என ஏங்குபவரும் உண்டு. இருப்பினும் அத்துன்பத்தை அவனே ஒரு நாள் கண்டு களைவான் என்ற நம்பிக்கையோடு அவனே கதி என்று கிடக்கை அடியாண் இயல்பு

*'தான் நோக்காது எத்துயரம்*
*செய்திடினும் தார்வேந்தன்*
*கோல்நோக்கி வாழும் குடியே*
*போன்று இருந்தேனே'*

நோயாளன் ஒருவன் கையில் ஒரு கோடைக்கட்டி. சீழ்பிடித்து வலிக்கிறது. மருத்துவனை நாடிச் செல்கிறான். அவன் அந்தக் கட்டியை அறுத்து, தீயென எரியும் மருந்திடுகிறான். அறுத்ததால் வரும் வலியையும், மருந்தால் வரும் எரிவையும் அந்த நோயாளன் தாங்கிக்கொண்டு மருத்துவன்பால் கொண்ட அன்பில் குறையாது அவனையே நம்பிக்கிடக்கிறான்.

இப்படி அடியார் வாழ்விலும் ஆண்டவன் சோதனை பலநிகழும். அடியவன்பால் அமைந்துள்ள 'யான், எனது' என்னும் அகங்கார மமகாரச்செருக்கை அறுத்து உள்ளத்தைத் தூய்மை செய்வதற்காகச் சில சோதனைகளை ஆண்டவன் நிகழ்த்துவான். ஆனால்,

*'வாளால் அறுத்துச் சுடினும்*
*மருத்துவன்பால்*
*மாளாத காதல் நோயாளன்போல்'*

அடியவன் ஆண்டவனே அருள்வான் என அமைவன்.

கப்பல் கொடிமரத்தில் வாழும் கடற்பறவை கூம்பை விடுத்துக் கடலில் அங்கும் இங்கும் பறந்து திரிந்தாலும் அதற்கு இறுதியில் அடைக்கலம் தருவது அந்தக் கொடிமரமே அப்படியே ஆண்டவனையே ஆதாரமாகக் கொண்ட இந்த ஆன்மா மனச்சஞ்சலத்தால் அங்கும் இங்கும் ஆதாரம் தேடி அலைகிறது. அதையும் இதையும் ஆதாரம் என நம்பி அலைகிறது. இறுதியில் எங்கும் ஆதாரம் காணாது, எதிலும் ஆதாரம் காணாது நின்திருவடியே சரணம் என்று வந்து அடைந்து அவன் அடிநீழலில் அமர்கிறது.

*எங்கும்போய்க் கரைகாணாது*
*எறிகடல் வாய்மீண்டு ஏயும்*
*வங்கத்தின் கூம்பு ஏறும்*
*மாப்பறவை*

போன்று அடியவன் கண்ணனே காப்பு என்று இருப்பன்.

தாமரைக் குளம் ஒன்று. அருகே மின் விளக்குகளும் உள்ளன. இரவெல்லாம் அவை ஒளி உமிழ்ந்துகொண்டிருக்கின்றன. ஆனால் அந்த ஒளியில் தாமரை மலர்வதில்லை. வைகறையில் கதிரவன் தோன்றுகிறான். அவன் கதிர்கள் தாமரை மலரைத் தழுவுகின்றன. உடனே அது இதழ் விரிந்து மலரத் தொடங்குகிறது. இப்படியே பொருளாளற் சிலர் கொடுத்துப் புகழ்

பெறுவர். அறிவாளர் சிலர் அறிவு அளித்துப் புகழ்பெறுவர். அந்தப் புகழ்கள் எல்லாம் நிலையானவை அல்ல. பெறுவோரிடம் அந்தப் பொருளும், அறிவும் நிலைத்து நிற்பன அல்ல. மேலும் அவை ஆன்மீக மலர்ச்சியைத் தருவன அல்ல. அவா, வெகுளி முதலிய கட்டுக்களிலிருந்து ஆன்மாவை மலர்விப்பன அல்ல. ஆண்டவனின் அருட்புகழே பாச இருட்டிலிருந்து, மாயை மயக்கத்திலிருந்து உயிரை மலர்விக்கிறது. அந்த ஆண்டவனின் அருட்புகழ்க்கே அடியவனின் அகம் குழைகிறது. உன் அந்தமில் சீர்க்கு அல்லால் அகம் குழையமாட்டேன்' என்று அடியவன் வைராக்கியம் கொள்கிறான். - பொன்னும், பொருளும், மண்ணும் பிறவும் அவனை மகிழ்விக்காமல், மலர்விக்காமல் போகின்றன. அந்தம் இல்லாத ஆண்டவன் சீர்க்கே அவன் ஆளாகின்றான். கண்ணனே காப்பு எனக்கசிந்து உருகுகிறான்.

நன்செய், புன்செய் நிலங்களை அறிவோம். கரும் மண் நிலம்; செம்மண்நிலம் என்பதையும் அறிவோம். மானாவரி நிலம். அல்லது வானம் பார்த்த பூமி என ஒருவகை நிலப்பகுதியும் உள்ளது. அங்கு விதைத்த வித்து வானத்தைப் பார்த்தே முளைத்து, தழைத்து வளரக் கூடியது. அப்படிப்பட்ட நிலத்தில் இட்ட வித்து வானம் ஒரு பருவம் பெய்யாது பிழைப்பின், மறுபருவம் பெய்யாது பிழைப்பின் அதற்காக வானத்தை வெறுத்து விடுவதில்லை. என்றேனும் எப்போதேனும் பெய்யும்; பெய்து நம்மை உய்விக்கும் என்று அந்த வித்துக்கள் வானத்தையே, அதன் மழையையே எதிர்நோக்கிக்கொண்டு கிடக்கும். அப்படியே அடியவன் இருள்தருமா ஞாலமாகிய இந்த மானாவரியில் வீழ்ந்து கிடக்கிறான். அவன் ஆன்ம மலர்ச்சிக்கு ஆன்மீக விழிப்பிற்கு இறைவனை எதிர்நோக்கி அவன் அருளை நாடித் தவிக்கிறான். இன்றல்ல நாளையல்ல என்றோ ஒருநாள் அவன் அருள் தனக்கு வாய்க்கும் என்று அவனையே எதிர்நோக்கி அல்லும் பகலும் கண்ணனே காப்பு என்று கருதித் திளைக்கின்றான்.

பயணங்கள் எல்லாவற்றிற்கும் முடிவு உண்டு. புறப்பட்ட இடத்திலிருந்து நேராகப் போய்க்கொண்டே இருந்தால் புறப்பட்ட இடத்திற்கே வந்து சேரும். இந்த ஆன்மப் பயணமும் அப்படியே கடலிலிருந்து மேகமாய்த் திரண்டு அருவியாய்ப் புரண்டு ஆறாய் உருண்டு ஓடி ஓடி இறுதியில் தோன்றிய கடலில் கலந்து தன் பயணத்தை முடித்துக் கொள்வதுபோல் ஆன்மா, அவனிடமிருந்து புறப்பட்ட ஆன்மா, ஆண்டவனைப் புகலிடமாகக்

## நாலாயிர திவ்ய பிரபந்தம்
(அருளிச்செயல்)

| அருளிச்செயல் | பாசுரங்கள் |
|---|---|
| நம்மாழ்வார் | 1296 |
| பொய்கையாழ்வார் | 100 |
| பூதத்தார் | 100 |
| பேயார் | 100 |
| திருமங்கையாழ்வார் | 1136 |
| தொண்டரடிப்பொடியாழ்வார் | 65 |
| பெரியாழ்வார் | 485 |
| ஆண்டாள் | 173 |
| குலசேகர ஆழ்வார் | 105 |
| திருப்பாணன் ஆழ்வார் | 11 |
| மதுரகவி ஆழ்வார் | 216 |
| இவர்களுடன் | 3797 |
| திருவரங்கத்தமுதனார அருளிச்செய்த இராமானுஜ நூற்றந்தாதி | 108 |
| மணவாள மாமுனிகள் அருளிச்செயத உபதேச ரத்னமாலை | 74 |
| திருவாய்மொழி நூற்றந்தாதி | 100 |
| சேர்த்து நாலாயிரத்திவ்யபிரபந்தம் ஆகும். | 4079 |

தகவல்: திரு. என்.சி. கோபாலன் - சென்னை.

கொள்வதின்றி வேறு புகலிடம் இல்லை என்று உணர்ந்து அவன் திருவடியையே பற்றிக் கொண்டு கண்ணனே காப்பாகப் பாடு கிடக்கும்.

வாழ்வு இரண்டு வகையினது. ஒன்று அருள் நோக்குடையது. மற்றது பொருள் நோக்குடையது. உயிர் இறைவனை எண்ணி அருள் வழி நிற்பதும் உண்டு. உலகினை எண்ணில் பொருள்வழி நிற்பதும் உண்டு. இப்படி உயிர் இருநெறிப்படும் இயல்பை உணர்ந்து தன்னிலை தன் ஆன்மாவின் குறிக்கோள் இன்னதெனத் தெளிந்த உயிர் தனனை, தன் இயல்பை தன் குறிக்கோளைக் கண்டு கொண்ட உயிர், இறைவன் தன்னையே தான் வேண்டி நிற்கும். சீவாத்மா பரமாத்மாவை அடைதலையே தன் வாழ்வின் பயனாகக் கருதிக்கண்ணனே காப்பு என்று வாழும்.

திருமால் நல்லோரைக் காக்க, அல்லோரைத் திருத்திப் பணி கொள்ள எடுத்த அவதாரங்கள் பத்து, அவற்றுள் காக்கும் பணியை நிறைவாகச் செய்த அவதாரம் கண்ணன் அவதாரமே.

தோன்றிய உடனேயே கை விலங்குகள் கழன்றன சிறைக் கதவும் திறந்தது.

வளரும் போது ஆககளை காக்க ஐந்துதலைப் பாம்பின் மீது ஆடி அடக்கினான்.

கோவர்த்தனகிரியைக் குடையாய்ப் பிடித்து ஆயர்களைக் காத்தான்.

சகாதேவன் வேண்டுகோளை ஏற்று மகாபாரதப் போரில் பாண்டவர் ஐவரையும் காத்தான்..

பகவத் கீதை அருளி உலகு உயிர் என்றும் உய்ந்தருள உதவினான்.

இப்படிக்காக்கும் பணியை நிறைவுறச் செய்த அவதாரம் கண்ணன் அவதாரம். கண்ணிநுண் சிறுத்தாம்பினால் கட்டுண்ண பண்ணிய ஒளிவந்த தன்மையை விளக்கமுறச் செய்த அவதாரம் கண்ணன் அவதாரம். தனக்குக் கல்வி கற்பித்த சாந்திபனி முனிவரின் முதலையுண்ட மகனை மீட்டு அவர்க்கு அளித்தவன். எனவே தான் காப்பைப் பற்றி ஆழ்வார கருதியபோது கண்ணன் அவதாரம் அவர்க்குக் காட்சி ஆயிற்று.

காப்பு மறந்தறியேன்;
கண்ணனே என்றிருப்பன்;
ஆப்பங் கொழியவும் பல்லுயிர்க்கும்
ஆக்கை
கொடுத்தளித்த கோனே!
குணபரனே! உன்னை
விடத்துணியார்
மெய்தெளிந்தார் தாம்
-திருமழிசை ஆழ்வார்

# ஸ்ரீ மகாவிஷ்ணுவின் பத்து அவதாரங்கள்

புலவர். மூ. மணி - வேலூர்.

வடமொழியில் வியாசர் இயற்றிய பாரதத்தை வழிநூலாகக்கொண்டு தமிழில் வில்லிப்புத்தூராழ்வார் பாரதத்தை இயற்றினார். பிராமண குலத்திற் பிறந்த இவரது சொந்த ஊர் நடுநாடென்று சொல்லப்படுகின்ற திருமுனைப்பாடி நாட்டில் சனியூரில் பிறந்து பதினான்காம் நூற்றூண்டில் வாழ்ந்தவர். பரதவம்சத்தில் பிறந்த பாண்டவர், துரியோதனாதியரின் வரலாற்றைக் கூறும் இந்நூலில் ஸ்ரீகிருஷ்ணனுடைய வரலாறும் ஆங்காங்கே விரவி வருமாறு சிறப்பித்துப் பாடியிருப்பதாலும் திருமாலின்மேல் அளவுகடந்த பக்தி கொண்டு வாழ்ந்ததாலும் "ஆழ்வார்" என்ற சிறப்பு அடைமொழியும் சேர்த்து அழைக்கப்பட்டார். இம்மகாபாரத நூலில் சொற்சுவை, பொருட்சுவை மட்டுமின்றி உவமை முதலிய பொருளணிகள் அமைத்தும், மடக்கு, பிராசம் முதலிய அணிகளும் கொண்டமைத்தும், யுத்தவருணனைகளும் சந்த நயமும் மற்ற நூல்களைவிட மிகுந்திருப்பதனாலும் இந்நூலைப் பலரும் விரும்பிப் படிக்கின்றனர். வில்லிப்புத்தூராழ்வார் தாமியற்றிய மகாபாரத நூலின் ஒவ்வொரு சருக்கத்தின் முதலில் கடவுள் வாழ்த்துப் பாடலாக ஸ்ரீ மகாவிஷ்ணுவைச் சிறப்பித்துப் பலவாருகப் புகழ்ந்து பாடி தன்நூல் இடையூறின்றி இனிது முடிவு பெறும் பொருட்டு ஸ்ரீமகாவிஷ்ணுவை வணங்கிப் பாடியுள்ளார். மகாபாரதத்தில் சல்லியப்பருவத்தில் ஸ்ரீமந்நாராயணனது அருமை, பெருமைகளைச் சிறப்பித்துப் பாடியிருப்பதுடன் திருமாலின் பத்து அவதாரங்களின் சிறப்பையும் பாடியுள்ளார். இனி வில்லிபுத்தூராழ்வார் பாடிய கடவுள் வாழ்த்துப்பாடலையும், திருமாலின் பத்து அவதாரங்களின் விவரத்தையும் காண்போம்.

## திருமாலின் தசாவதார ஸ்துதி

மீனும், ஆமையும், பன்றியும், பெரிய மனித வடிவங் கலந்த சிங்கமும், இவ்வுலகைத் தந்திரத்தால் அளந்திட்ட குறுகிய மனித வடிவமாய், தணியாமல் மேன்மேலும் கோபிக்கின்ற கோடாலியும் வலியவில்லும், பகைவரை வெல்லும் கூர் நுனியையுடைய கலப்பையும் முறையே கொண்ட பரசுராமர், இராமர், பலராமர் ஆகிய மூன்று இராமர்களின் வடிவமாய் விண்ணுலக தேவர்களும் வந்து வணங்க இவ்வுலகத்திலுள்ள கொடியவர்களை அழிக்க வந்து தோன்றிய ஸ்ரீகண்ணபிரானது வடிவமாய் பலவகைப்பட்ட நடைவகைகளைக் கொண்டு குதிரை வடிவங்கலந்த மனித வடிவமாய் இனி கல்கி என்னும் அவதாரம் எடுத்து எல்லா உயிர்களிடத்தும் கருணை புரியும் ஸ்ரீமந்ராமாயணமூர்த்திக்கு நமஸ்காரம் என்று ஸ்ரீவில்லிப்புத்தூராழ்வார் மகாபாரதத்தில் சல்லிய பருவத்தில் முதல் கடவுள் வாழ்த்துப்பாடலைப் பாடியதிலிருந்து அவருக்கு திருமாலின் மீது இருந்த சிறந்த பக்தி புலப்படுகின்றதல்லவா? அக்கடவுள் வாழ்த்துப் பாடலாவது:

மீனாமை கோலநெடு நரசிங்க மாகி
நிலம் விரகால ளந்த குறளாய்
ஆனாது சீறுமழு வல்வில்லு வெல்லு
முனை யலமுற்ற செங்கை யவராய்
வானாடர் வந்துதொழ மண்ணுடர்
யாவரையு மடிவிக்க வந்த வடிவாய்
நானாலி தங்கொள்பரி யாளாகி
நின்றருளு நாராய னாய நமவே!!

## பத்து அவதாரங்கள்

இனி ஸ்ரீமந்நாராயணன் பல அவதாரங்களில் மிகவும் சிறப்பித்துச் சொல்லப்படும் பத்து அவதாரங்களின் விவரத்தை ஒன்றன் பின் ஒன்ருகக் காண்போம்.

### (1) மச்சாவதாரம்

முன்னொரு காலத்தில் பிரம தேவர்கள் துயிலுங் காலத்தில் சோமகனென்னும் அசுரன் ஒருவன் வேதங்களையெல்லாம் கவர்ந்து கொண்டு கடலுள் சென்று மறைந்துவிட்டான். பிரமன் முதலிய தேவர்கள் ஸ்ரீமகாவிஷ்ணுவை வேண்ட அவர் ஒரு பெரு மீனாகத் திருவவதாரம் கொண்டு கடலினுள் புகுந்து அவ்வசுரனைத் தேடி அவனைக் கொன்று வேதங்களை மீட்டு வந்தார். பின் அன்னவ

டிவமாய்ச் சென்று அவ்வேதங் களைப் பிரமனுக்கு உபதேசித்த ருளினார்.

### (2) கூர்மாவதாரம்

துருவாச முனிவரது சாபத் தால் சொர்க்கலோகச் செல் வங்களையெல்லாம் கடலில் சென்று மறைந்துவிட்டன. அச் செல்வங்களை மீட்டும்பொருட்டு இந்திரன் முதலிய தேவர்கள் திருமாலின் நியமனப்படி அசு ரர்களுடன் சென்று மந்தரம் லையை மத்தாகவும், வாசுகி என்னும் பெரும் பாம்பைக் கயி றாகவும் கொண்டு திருப்பாற் கடலை கடைந்தபோது அம் மந்தரகிரி கடலில் சென்று அழுந்திவிடாதபடி திருமால் மகா கூர்ம ரூபத்தையெடுத்து அதற்கு ஆதாரமாகத் தாங்கியி ருந்தார்.

### (3) வராக அவதாரம்

ஒரு காலத்தில் இரணியாக் ஷன் என்ற அரக்கன் பூமி யைப் பாயாகச் சுருட்டியெடுத் துக் கொண்டு கடலில் சென்று மறைந்துவிட்டான். இந்திரன் முதலான தேவர்களும் முனி வர்களும் திருமாலை வேண்ட அவ்வேண்டுகோளின்படி மகா வராக ரூபமாய் வடிவமெடுத் துச்சென்று பூமியைக் கொண்டு வந்து பழையபடி விரித்தருளி னார்.

### (4) நரசிங்க அவதாரம்

தேவர், மனிதர், விலங்கு முதலிய பிராணிகளாலும் ஐம் பெரும் பூதங்களாலும், ஆயு தங்களாலும் தனக்கு மரணம் நேராதபடி அளவற்ற வரங்க ளைப் பெற்றிருந்தான். இரணி யாக்கனின் உடன்பிறந்த இர ணியன் என்பவன். மகா விஷ்ணுவின் பக்தனான இர ணியனின் மகன் பிரகலாதன் தன்பெயரைக் கூறுமல் ஸ்ரீமந் நாராயணனின் திருநாமத் தைக் கூறிவந்ததால் தன் மக னென்றும் பாராமல் அவனைக் கொல்ல நினைக்க திருமாலின் அருளால் அவனைக் கொல்ல முடியவில்லை. பிரகலாதனை நோக்கி நீ சொல்லும் நாரா யணன் எங்குள்ளான்? என்று வினவ பிரகலாதனும் நாராய ணன் தூணிலுமுளன் நீ சொல் லிய சொல்லிலும் உள்ளான் என்று சொன்னான். இரணி யன் கோபம் கொண்டு இங்கு உளனா? என்று தூணைப் புடைக்க அத்தூண் பிளந்து அதிலிருந்து மனித ரூபமும், சிங்கமுக வடிவும் கொண்ட நரசிங்கமூர்த்தியாய்த் தோன்றி தன் திருக்கரங்களில் உள்ள நகங்களால் இரணியனின் மார் பைப் பிளந்து கொன்றுர்.

### (5) வாமண அவதாரம்

மகாபலி என்னும் அசுரன் தன் வல்லமையால் இந்திரன் முதலான தேவர்களை வென்று மூன்று உலகங்களையும் தன் வசமாக்கி அரசாட்சி செய்து செறுக்குடன் வாழ்ந்தான். அர சிழந்த தேவர்கள் திருமாலை வேண்ட அப்பெருமான் குள்ள வடிவமான வாமனாவதாரமெ டுத்து காசியப முனிவருக்கும் அதிதி என்ற தேவியிடனி டத்தும் தோன்றிய பிராமணப் பிரமசாரியாகி வேள்வியியற்று யாவர்க்கும் வேண்டியவற்றைக் கொடுத்து வந்த மாபலியிடம் சென்றுர். தவம் செய்வதற் காக தன் காலடியால் மூன்று அடிமண் வேண்டுமென மாபலி யிடம் கேட்டார். அவ்வாறே மூன்றடி தருவதாக மாபலி தத் தம் செய்து தர நீரைக்கை யிலேற்ற உடனே திரிவிக்கிர மனாக ஆகாயத்தை அளாவி வளர்ந்து ஓரடியால் விண்ணை யும், மற்றொரு அடியால் மண் ணையும் அளந்து பின் எஞ் சியுள்ள ஓரடியால் மாபலியை பாதாளத்தில் அழுத்தி அடக்கி னார்.

### (6) பரசுராம அவதாரம்

உலகத்தில் எவரும் அழிப்ப வரில்லாமையால் கொழுத்துத் திரிந்து கொடுமை பல வற்றைச் செய்து வந்தனர் க்ஷத்திரியவம்சத்தினர். அவ் வம்சத்தினரையழித்து தரு மத்தை நிலைநாட்ட ' ஸ்ரீமந் நாராயணன் ஜமதக்நி முனிவ ரது மனைவியான ரேணு கையினிடம் பரசு என்னும் கோடாலிப்படையை ஆயுதமா கக் கொண்டதனால் பரசுரா மன் என்ற பெயரில் வதரித்தார். தன் தந்தையின் ஓமதேனுவைக் கவர்ந்து சென்று கொன்றுவிட் டதனால் கார்த்த வீரியார்ச்சுன னையும், அவனது குமாரர்களை யும் கொன்று அழித்து மேலும் க்ஷத்திரிய வமிசம் முழுவதன் மேலும் கோபாவேசங்கொண்டு உலகில் உள்ள அரசர்கள் பலரை இருபத்தோரு தலைமுறையாக போரிட்டு பரசுராமர் அவர் களை அழித்தார்.

### (7) இராமாவதாரம்

ஒருகாலத்தில் தேவர்களெல் லோரும் இராவணன் முதலான அரக்கர் குலத்தின் உபத்திர வம் பொறுக்கமாட்டாமல் பாற்க டலில் பள்ளி கொண்ட ஸ்ரீமகா விஷ்ணுவைச் சரணடைந்து வேண்ட அப்பிரான் தசரத சக் கரவர்த்திக் குமாரனாய் ஸ்ரீராம னாகத் திருஅவதாரம் செய்து அரக்கர் குலத்தையழித்து நல் லோரைக் காத்தருளினார்.

### (8) பலராம அவதாரம்

துஷ்ட அரக்கர்கள் பல ரும் கெட்ட அரசர்கள் பல

ரும் ஒருங்கே சேர்ந்து மக்களை துன்புறுத்தி வந்ததனால் பூமியின் பாரத்தைக் குறைக்க வேண்டி அப்பூமிதேவியின் வேண்டுகோளின்படி திருமால் வசுதேவ குமாரனாய் பலராமன் என்ற பெயரில் அவதரித்து தீயோரை அழித்தார்.

### (9) கிருஷ்ணவதாரம்

துரியோதனனும் அவன் தம்பியரும் அரசாட்சி செய்யும் காலத்தில் பாண்டவர்களுக்குக் கொடுமைகள் பல புரிந்து வந்தனர். பூமாதேவியின் வேண்டுகோளின்படி ஸ்ரீமகாவிஷ்ணு கிருஷ்ணன் என்ற பெயரில் வசுதேவ குமாரனாய்த் தோன்றி துரியோதனாதியர்களை அழித்து தருமத்தை நிலை நாட்டினார்.

### (10) கல்கி அவதாரம்

பாற்கடல் பரந்தாமன் மேற்கண்ட ஒன்பதவதாரங்களையெடுத்து தீயோரை அழித்து தருமத்தை நிலைநாட்டினார். இனி கலியுகத்தில் திருமால் தருமத்தை நிலைநாட்ட எடுக்கப்போகும் அவதாரம் கல்கி அவதாரமாகும். சம்பளமென்னும் கிராமத்தில் ஓர் அந்தணன் மகனாய் குதிரை வடிவமான குதிரையின் மேலேறிக் கையில் வாள் கொண்டு கொடுங்கோல் புரியும் மன்னவரனைவரையுங் கொன்று அதர்மத்தை அழித்து தர்மத்தை நிலைநாட்ட கல்கி அவதாரம் எடுக்க இருக்கிறுர் என மகாபாரத நூல் கூறுகிறது.

### முடிவுரை :

ஸ்ரீ மகாவிஷ்ணு மோகினி முதலான பல அவதாரங்களை எடுத்திருப்பினும் பலராலும் போற்றப்படுவது மேற்கண்ட பத்து அவதாரங்களேயாகும். உலகில் அவ்வப்போது அதர்மம் செய்துவந்த அசுரர்களின் கொடுமைகளைப் போக்கி தர்மத்தை நிலைநாட்ட திருமால் அவதாரம் செய்துள்ளார். பாற்கடலில் பள்ளிகொண்ட ஸ்ரீமந்நராயணன் இப்பூவுலகில் ஏழுமலைகளுக்கு மேல் திருமலையில் ஸ்ரீவேங்கடவனாக கோயில் கொண்டுள்ளான் அத்திருவேங்கடவனை வழிபட்டால் பாவங்கள் யாவும் நீங்கி தம் வாழ்க்கையில் பல செல்வங்களைப் பெற்று வாழ்வது உறுதியாகும்.!



## கர்வம் கூடாது

இந்த உலகத்தில் ஒரு பாவமும் செய்யாமல் கர்வத்தில் மட்டுமே அழிந்தவர்களும் உண்டு. அதனால் "தான்" என்ற அகம்பாவம் கொள்ளாமல் நாம் செய்யும் ஸகல காரியங்களும் ஸ்ரீகிருஷ்ணன் திருவடியிலேயே ஸமர்ப்பிக்க வேண்டும்.

'தம்போத்பவன்' என்ற மன்னன், பலராமன் போன்றவர்கள் தன்னைவிட சிறந்தவன் உலகத்தில் யாரும் இல்லை என்றிருந்தார்கள். பலராமனின் கர்வத்தை மாருதியைக் கொண்டு ஸ்ரீகிருஷ்ணபகவான் பங்கம் செய்தார்.

தம்போத்பவனும் தனது அரச சபையைக் கூட்டி, தினமும் 'என்னைவிட சிறந்தவர் உலகில் உண்டா?' என்று வினவுவான். அதற்கு மற்ற எல்லோரும் 'இல்லை, இல்லை' என்று கூறவேண்டும். அதில் திருப்தி அடைவான். இவனுடைய கர்வத்தை அடக்க ரிஷிகள் சிலர் ஒருநாள் மன்னன் வினவும்போது, "உண்டு என்றுர்கள். இதைக்கேட்டவுடன் மன்னவன், என்னிலும் வல்லவன் உண்டா? யார் அவன்?" என்று கேட்டான். அதற்கு ரிஷிகள், பத்ரிகாஸ்மரத்தில் அலக்நந்தா நதிக்கரையில் தவம் புரியும் நரநாராயணர்களை வென்றால்தான் நீ சிறந்தவன் ஆகமுடியும், என்று கூறினார்கள். உடனே தன் ஸைன்யங்களுடன் பத்ரிகாஸ்ரமம் சென்று, அங்கு நரநாராயணர்களை கண்டு, அவர்களுடன் போர் புரிய வந்திருப்பதாகச் சொன்னான். அதற்கு நரநாராயணர்களே, இப்பொழுது போர் புரிய வேண்டாம் என்று சொன்னதற்கு மன்னவன் வற்புறுத்தி தன் ஸைன்யங்களை ஏவிவிட்டான். அருகில் இருந்த தர்ப்பைப்புல்லை எடுத்து அம்பாக்கி நரநாராயணர்கள் அந்த ஸைன்யங்களை அழித்ததுடன் மன்னனையும் செயலிழக்கச் செய்துவிட்டனர், தன் தவற்றை உணர்ந்த மன்னன் அகங்காரம் ஒழிந்து நரநாராயணனின் தாள்பணிந்து உயிர்ப்பிச்சை பெற்றுன். அந்த நரநாராயணன் தான் பாரதத்தில் அர்ச்சுனனாகவும், கிருஷ்ணனாகவும் அவதாரம் செய்தனர்.

சத்யபாமைக்கும் 'தான்' என்ற அகங்காரம் உண்டு. கருடனுக்கும் தான் என்ற கர்வம் உண்டு. இவ்விரண்டு பேர்களுடைய கர்வத்தையும் மாருதியைக் கொண்டு சிதைத்தார் ஸ்ரீகிருஷ்ண பரமாத்மா ஆகையால் கர்வம் அகங்காரம் கொள்ளக்கூடாது.

தகவல்: டாக்டர் எஸ்.எல். ஸ்ரீநிவாசன் - சத்தியமங்கலம்.



# ஸ்ரீ வேங்கடேஸ்வரா

# வன மேம்பாட்டுத் திட்டங்கள்

மனித மனம் என்றென்றும் மகிழ்ச்சியும், அதிசயமும் கொள்ளும் வகையில் காடுகள் ஆண்டாண்டு காலமாக விளங்கிவருகின்றன. இயற்கையின் ஆற்றலுக்கும் அழகுக்கும் என்றென்றும் புதுப்பொலிவும், புதுப்பொருளும் அளித்து வருவன காடுகளாகும்.

இத்தகு விலைமதிப்பற்ற இயற்கை வளத்தை புனிதமிகு திருமலையில் பாதுகாத்திடும் வகையில் 1981ஆம் ஆண்டு 'காடு வளர்ப்புத திட்டம்' ஒன்றினை பெருமளவில் பெருமுயற்சியுடன் ஒரு புனித வேள்வியாக மேற்கொண்டு பல்வேறு இனங்களைச் சேர்ந்த சுமார் 25 லட்சம் மரங்களை திருப்பதி மற்றும் திருமலையில் வளர்க்கும் பணியில் தி.தி. தேவஸ்தானம் ஈடுபட்டது. இதன் மூலமாக திருமலை மலைச்சரிவுகள், திருப்பதி நகரம் ஆகிய பகுதிகள் யாவும் பசுமையான 'வனச் செல்வத்துடன்' விளங்கிடவேண்டும் என்பதே திருமலை திருப்பதி தேவஸ்தானத்தார் பெருவிருப்பமாகும்.

துவக்கப்பட்ட திட்டத்தின் பெருவெற்றியின் தூண்டுதலினால் தற்போது திருமலை திருப்பதி தேவஸ்தானம் பல்வேறு திட்டங்களைப் புகுத்தியுள்ளது. அதுதான் "ஸ்ரீவேங்கடேஸ்வரா காடு மேம்பாட்டுத்திட்டம்". இத்திட்டத்தினால், திருமலை திருப்பதி தேவஸ்தானம் மேற்கொண்டுள்ள இப்புது முயற்சிகளில் யாத்திரிகப் பொதுமக்களும் பங்கேற்கும் வகையில் வழிமுறைகள் செய்யப்பட்டுள்ளன. மேலும், இத்திட்டத்திற்கு நன்கொடை வழங்கும் பக்தர்களுக்கு பலவிதமான நன்மைகளும் செய்யப்பட்டுள்ளன. இந்த 'வேங்கடேஸ்வரா காடு மேம்பாட்டுத் திட்டத்தின்' முக்கிய விவரங்கள் பின்வருமாறு:-

### விருக்ஷ ஸம்வர்த்தனம்

நன்கொடை ரூ. 25,000

(மரம் வளர்ப்புத் திட்டம்)

இத்திட்டத்தின் கீழ் 500 செடிகள் திருமலை மற்றும் திருப்பதியில் நடப்படும். இத்திட்டத்திற்கு நன்கொடை அளிக்கும் நபரின் அல்லது அவர் விரும்பும் நபரின் பெயரில் இம்மரங்கள், இச்செடிகள் அழைக்கப்படும். இச்செடிகள் ஐந்தாண்டுகளுக்கு பராமரிக்கப்படும்.

### விருக்ஷ பிரஸாதம்

நன்கொடை : ரூ. 15,000

இத்திட்டத்தின் கீழ் ஒவ்வொரு ஆண்டும் பயன்தரக்கூடிய 100 பழ அல்லது மலர் விதைகள் நன்கொடையாளர் அல்லது அவர் விரும்பும் நபரின் பெயரில் 10 ஆண்டுகளுக்கு விநியோகிக்கப்படும்.

### ஸ்மாரக வனாலு (நினைவு மரங்கள்)

நன்கொடை : ரூ. 5,000

இத்திட்டத்தின் கீழ் திருமலை-திருப்பதி மலைச்சரிவுகளில் உள்ள தோப்பு ஒன்றில் அங்கு விளையக்கூடிய ஒரு குறிப்பிட்ட 10 மரவகைகள் நடப்பட்டு, 5 ஆண்டுகள் அவை பராமரிக்கப்படும். நன்கொடையாளரின் பெயர் அத்தோப்பிற்கு வைக்கப்படும்.

### வன சம்ரக்ஷண பாகஸ்வாம்யம்

நன்கொடை : ரூ. 2,000

(காடு வளர்ப்பில் நும் பங்கு)

இத்திட்டத்தின் கீழ் ஏழுமலைகளில் இயற்கையான காட்டுச் சூழ்நிலை பாதுகாத்து மேம்படுத்தப்படும். இத்திட்டத்தில் பங்கேற்கும் நன்கொடையாளரின் ஆர்வத்தை நினைவுகூறும் வகையில் அவர்தம் பெயர் தேர்ந்த இடத்தில் காட்சியாக்கப்படும்.

சலுகை மாற்றங்களுடன் கூடிய இப்புதிய ஸ்ரீவேங்கடேஸ்வரா வன மேம்பாட்டுத் திட்டம் 1-2-96 முதற்கொண்டு செயல்படும். 31-1-96 தேதிக்கு முன்பு வரை இத்திட்டத்திற்கென நன்கொடை வழங்கிய பக்தர்கள், இத்திட்டத்திற்கென முன்பு அளிக்கப்பட்ட சலுகைகளைப் பெறுவர். நன்கொடை அளிக்கப்படும் மேற்படி தொகைகளுக்கு பிரிவு 35 CCB-இன் கீழ் 100 சதவிகிதம் வருமானவரி விலக்கு உண்டு.

கீழ்க்கண்ட முகவரிக்கு நன்கொடை அனுப்புங்கள்

THE EXECUTIVE OFFICER, T.T. DEVASTHANAMS - TIRUPATI-517501.

(தொடர கட்டுரை)

# ஸ்ரீ ராமாநுஜர்

திரு. மா சீதாராமன் - காஞ்சிபுரம்.

"அண்ணா! அப்பா உம்மிடம் என்னை அனுப்பிவைத்தார். என் மாமியார் என் பிறந்தகத்திலிருந்து பாகமும் பரிசாரகமும் செய்யும் ஒருவரைக் கொண்டு வரவேண்டும் என்று கூறியனுப்பிவிட்டார். இதனை உம்மிடம் தெரிவிக்குமாறு அப்பா கூறியனுப்பினார்!"

இதுகேட்டு எம்பெருமானார், தங்காய்! யாதொரு கவலையும் கொள்ளவேண்டா! உன்னுடன் தாசரதியை (முதலியாண்டான்) அனுப்பி வைக்கிறேன். அவர் எல்லாவற்றையும் கவனித்துக்கொள்வார்" என்று கூறித்தக்க ஏற்பாடுகளையும் செய்துவிட்டார்.

குருவின் வாசகப்படியே தாசரதி அத்துழாயின் புக்ககம் சென்றார். அத்துழாயின் மாமியார் மகிழ்வுறும் வண்ணம் கைங்கர்யங்கள் பலவும் செய்து வந்தார். ஆறுமாதங்கள் கழிந்தன. ஒருநாள் அவ்வூரில் வைணவர் ஒருவர் சுலோகம் ஒன்றுக்குத் தவறான பொருள் கூறிக்கொண்டிருந்தார். அப்பொருள் பிழையென்று தாசரதி எடுத்துக்கூறித் திருத்தலானார்.

"மடைப்பள்ளியில் வேலை செய்யும் உமக்குச் சாத்திரம் எவ்வாறு தெரிய முடியும்? உம் திறமையை மடைப்பள்ளியில் போய்க்காட்டும்!" என்று சீற்றத்துடன் அவ்வைணவர் கூறினார்.

இது கேட்டும் சினங்கொள்ளாத தாசரதி மதுரமான குரலில் மாண்புறப் பொருள் கூறி விளககங்கூறலானார். இவ்வுரையில் மனத்தைப் பறிகொடுத்த அவ்வைணவர் தாசரதியின் திருவடிகளில் வீழ்ந்து வணங்கினார்.



குருவின் அருளாணைக் கேற்பவே மடைப்பள்ளிப் பணியினை மேற்கொண்டிருப்பதாகத் தாசரதி கூறினார். எம்பெருமானாரின் சீடர் என்பதனை அறிந்து அனைவரும் அவரை வணங்கினர். சீடரின் மனப் பக்குவத்தைக் கேள்வியுற்ற எம்பெருமானார் தாமே சென்று அவரை அழைத்து வந்தார். இரகசியக்ரந்தத்தைத் தெளிவாக எடுத்துக்கூறியருளினார். "வைணவ தாசர்" என்னும் சிறப்புப் பெயரையும் தம் தொண்டின் சிறப்பால் முதலியாண்டான் பெற்றுத் திகழ்ந்தார்.

சிலநாள் சென்றபின் திருவரங்கத்துக்குத் திருக்கோட்டியூர் நம்பிகள் வந்து சேர்ந்தார்; எம்பெருமானாரைக் கண்டார்; திருமாலை ஆண்டான் என்பவரையும் தம்முடன் அழைத்துச் சென்றிருந்தார். நம்பியைக் கண்டதும் எம்பெருமானார் வீழ்ந்து வணங்கி வரவேற்றார்.

திருமலை ஆண்டான் (மாலாதரர்) என்பவர் ஆளவந்தாரின் சீடருள் ஒருவர். திருவாய்மொழிக்குப் பொருள் சொல்லுவதில் வல்லவர். இவரிடம் திருவாய்மொழிக்குப் பொருள் கேட்குமாறு சொல்லிவிட்டு நம்பிகள் சென்றுவிட்டார்.

திருமாலையாண்டானின் திருவாய்மொழிப் பேருரை எம்பெருமானார் திருமடத்தில் தொடர்ந்து நடைபெறலாயிற்று. இடையிடையே திருத்தங்கள் கூறிவந்தார் எம்பெருமானார். எனவே, தாம் கூறிவந்த உரைவிளக்கத்தை ஆண்டான் நிறுத்திவிட்டார்.

இதுகேட்ட நம்பிகள் திருக்கோட்டியூரிலிருந்தும் வந்து சேர்ந்தார். நடந்ததைக் கேட்டறிந்தார். எம்பெருமானார் அவதார புருஷன் என்றும், அவர் திருத்திக்கூறும் விளக்கவுரைகள் ஆளவந்தாரின் கருத்துக்களுக்கு ஒத்தனவே என்றும் நம்பிகள் கூறினார். இது கேட்டு ஆண்டான் வியப்புற்றார். எனவே, திருவாய்மொழிப்பேருரையைத் தொடர்ந்து நடத்திவரலானார். ஆளவந்தாரிடம் தாம்

கேளாத சிறப்பான விளக்கவுரை களையும் திருமலையாண்டான் எம்பெருமான் பக்கல் கேட்டு உகந்தார். திருமலையாண்டா னிடம் திருவாய்மொழிக்கு முழு வதுமாக உரைகேட்டு மகிழ்ந் தார் எம்பெருமானார். "ஆள வந்தாரின் குமாரர் திருவரங் கப் பெருமாளரையரிடம் கேட்க வேண்டியனவும் உள. அவற்றை யும் கேளும்!" என்று எம்பெருமா னாரிடம் பெரியநம்பி கூறினார்.

கர்மம், ஞானம், பக்தி, பிர பத்தி, சரமபர்வம் எனப்படும் ஐந்து உபாயங்களுள் ஐந்தாவது உபாய நிஷ்டையான சரமபர் வத்தின் பொருட்சிறப்பைத் திரு வரங்கப் பெருமாளரையர் எம் பெருமானார்க்கு உபதேசித்தருளி னார்.

திருவரங்கப்பெருமாளரைய ருக்கு மகப்பேறு இல்லை. தம்பி களாகிய சொட்டை நம்பி என் பாரை எம்பெருமானாருக்குச் சீட ராக்கி மகிழ்ந்தார் திருவரங்கப் பெருமாளரையர்.

திருவரங்கப்பெருமாளரையர்.

எம்பெருமானார் திருப்பாவை யில் ஆழ்ந்த ஈடுபாடு கொண்டு விளங்கியமையால், இவருக்குத் 'திருப்பாவை ஜீயர்' என்றொரு திருநாமமும் உண்டு.

இவ்வாறு எம்பெருமானார் இளமைக் காலம் முதல் ஆச் சார்யரும் வியக்கும் வண்ணம் கல்வி கற்றூர். கற்றவற்றைப் பலர்க்கும் கற்பித்தார்.

எம்பெருமானார் ஆச்சார்யர் பலரிடம் பாடங்கேட்டிருந்தா லும், சிறப்பாக ஐந்து ஆச்சார் யரிடத்துத்தான் அடிபணிந்து அர்த்தவிசேஷங்களைக் கேட்ட றிந்தார்.

பெரியநம்பிகள் (மகாபூரணர்), திருக்கோட்டியூர் நம்பிகள், திரு மாலையாண்டான் (மாலாத ரர்), ஆழ்வார்திருவரங்கப்பெரு மாளரையர் ஆகிய நால்வரிடம் பாடம் பயின்றமை இதுவரை அறிந்தோம். திருமலைநம்பிகளி டம் இராமாயணம் கேட்ட வர லாறு பின்பு அறிய இருக்கி றோம்.

எனவே, எம்பெருமானார் ஐந்து ஆச்சார்யர்கள் அடி பணிந்து மறைபொருள்களை யெல்லாம் மாண்புறக் கேட்ட றிந்தமையால் இவருக்கு "பஞ்சா சார்ய பதாச்ரிதர்" என்னுமொரு சிறப்புமுண்டு.

ஆளவந்தார், மேற்சொன்ன ஐவரிடமும் தனித்தனியே ஐந்து உபதேசங்களையும் சொல்லியி ருந்தார். ஆளவந்தாரின் சீடர் களாகிய ஐவரையும் குருவாகப் பெற்று ஐந்து இரகசியங்க ளையு ஒருங்கே பெற்றமையால், எம்பெருமானாரின் புலமை அள விறந்து காணப்பட்டது. மற் றுமொரு ஆளவந்தாராகவே எம் பெருமானார் காட்சியளித்தார்.

ஞான ஒளி வீசும் இவ ரின் திருவடிகளை வணங்கி யவர்களின் துன்பமும் துய ரமும் தீர்ந்தன. எனவே, இவர் வழிபடு மூர்த்தியாகவே விளங்கி வணங்குதற்குரியவரா னார். கற்றலிலும் கற்பித்தலி லும் நிகரற்று விளங்கிய எம் பெருமானார் உலகினரை முத்தி நெறிக்கு அழைத்துச் சென்றூர்.

இம்மைக்கும், மறுமைக்கும் உடையவர் என்னும் பொருள் பட இவரை "உபயவிபூதிபதி" என்றும் அழைக்கலாயினர்.

## அருள் நெஞ்சம்!

திருவரங்கர் திருக்கோயில் திருப்பணிகளில் இராமானுசர் முழுதுவதுமாகத் தம்மை ஈடு படுத்திக் கொள்ளலானார். திரு வரங்கத்திருக்கோயில் மிகவும் பெரியது; அகன்ற இடமுடை யது; நகரவீதிகளைத் தன் பிர காரத்துக்குள்ளாகவே அடக்கி நிற்பது. பொன்வேயப்பெற்ற கோபுரத்தையுடையது; அரசர்க ளின் பெரும்படைகளும் வந்து தங்குதற்குரிய வாய்ப்பினையு டையது. சிற்ப, ஓவிய, கட் டடவேலைப்பாடுகள் மிக்கது.

இத்தகைய திருக்கோவிலை ஸ்தானிகர் எனப்படுவோர் முக் கிய கைங்கர்யதாரராக இருந்து நிர்வாகம் செய்துவந்தனர். ஆனால், திருவரங்கரின் திருவ ருள் நியமனத்தால் அருச்சனை, வழிபாடு, விழா எனப் பலவகை யிலும் இராமானுசரே நிர்வாக அதிகாரியாக இருந்து திருப்ப ணிகள் செய்துவந்தார். இதன் ஸ்தானிகராக இருந்து வந் தவரின் பெருமையும் தலைமை யும் நாளடைவில் குறைந்துபோ யிற்று.

இதனால் ஸ்தானிகருக்கு இராமானுசரிடம் பகைமை உணர்வு தோன்றி வளர ஆரம் பித்தது. இராமானுசர் இருக் கும் வரை தனக்குப் பொறுப் பும் புகழும் நிலைக்காது என அறிந்த ஸ்தானிகர இவரை நஞ்சு கலந்த உணவிட்டுக் கொல்லத் துணிந்துவிட்டார்.

உடையவர் அன்னப்பிச்சை ஏற்றே உண்பது பழக்கம். ஏழு வீடுகளில் தினசரி அன்னப் பிச்சை ஏற்பார். வீடுகளில் ஒருவீட்டுச் சொந்தக்காரனைப் பொருளாசைகாட்டி ஸ்தானிகர் தன்வயப்படுத்தினார். அவ்வீட் டுச் சொந்தக்காரன் தன் மனை

யுடன் தன் திட்டத்தைக் கூறினான். ஆனால், வீட்டுக் காரியோ இப்பாதகச் செயலைச் செய்ய இசையவில்லை. வீட்டுக்காரனின் தொல்லை தாளாமல் இசைவதாகக் கூறித் தந்திரமான செயலை மேற்கொண்டாள்.

வழக்கமாக உடையவரின் பாத்திரத்தில் தான் அந்தப்பெண்மணி அன்னமிடுவது வழக்கம். ஆனால், அன்று வழக்கத்திற்கு மாறாக அன்னப்பாத்திரத்தை உடையவரின் பக்கத்தில் வைத்து விட்டுப் பணிவுடன் அவருடைய திருப்பாத கமலங்களில் வீழ்ந்து வணங்கினாள். அறிவாற்றல் மிக்க உடையவர் அந்தப் பெண்மணியின் மனக்கருத்தை உணர்ந்து கொண்டார். அந்த அன்னத்தில் நஞ்சு கலந்திருக்கவேண்டும் என்று ஊகித்தார். அந்த அன்னத்தைத் தன் பாத்திரத்தில் ஏற்றுக்கொண்டு நேரே காவேரி சென்று அந்தப் பிச்சை அன்னத்தை ஆற்றில் கொட்டிவிட்டு அன்று முழுவதும் பட்டினியாகவே இருந்தார்.

கோவில் ஸ்தானிகர் தன் மனைவி மூலம் உடையவரைக் கொல்லச் சதிபுரிந்த செய்தி திருக்கோட்டியர் நம்பிகளுக்கு எட்டியது. இதுகேட்டு நம்பிகள் திருவரங்கம் நோக்கி விரைந்தார். நம்பிகள் வருகையைக் கேட்டறிந்த் உடையவர் அவரை எதிர்கொண்டழைக்கக் காவிரிக் கரையை அடைந்தார்.

அப்போது உச்சி வெய்யில் நேரம். எனவே ஆற்று மணல் கொதிப்பாக இருந்தது. திருக்கோட்டியூர் நம்பிகளைக் கண்ட உடையவர் கொதிக்கும் ஆற்று மணல் என்றும் பாராமல் அப்படியே அவர் காலில் வீழ்ந்து வணங்கினார். அம்மணலில் சாஷ்டாங்கமாக வீழ்ந்தவர் எழுந்திருக்காமல் அப்படியே கிடந்தார்.

கிடாம்பியாச்சான் இதனைக் கண்டு மனங்கொதித்தார். திருக்கோட்டியூர் நம்பிகளை வெகுவாகக் கடிந்து கொண்டார். "குருவென்று கருதி உம் திருவடிகளில் வீழ்ந்து கிடக்கும் உடையவரை எழுந்திருக்கச் சொல்ல உம்மனம் ஏன் கல்லாகப் போனது? இதுதான் குரு சிஷ்யர் உறவின் அழகோ?" என்று கூறியவாறே கிடாம்பியாச்சான் ஆற்று மணலில் வீழந்தார் உடையவரைத் தம் உடல் மேல் கிடத்திக் கொண்டார்.

வெகுநேரமாக அமைதியாக இருந்த திருக்கோட்டியூர் நம்பிகள் இப்பொழுது பேச ஆரம்பித்தார். "உம்மைப்போன்று உடையவரிடம் உண்மையான அன்பு செலுத்துபவரைத் தான் தேடிக்கொண்டிருந்தேன். இப்பொழுது உம்மைக் கண்டு கொண்டேன்!" என்று உள்ளங்குளிரப்பேசினார். உடையவரைத் தூக்கியெடுத்துத் தம் மார்போடு அணைத்துக் கொண்டு ஆனந்தக் கண்ணீர் சொரிந்தார்.

"உடையவரே! இன்று முதல் பிச்சைக்குச் செல்வதைத் தவிர்ப்பீராக! கிடாம்பியாச்சான் அளிக்கும் உணவை மட்டுமே உட்கொள்ள வேண்டும்!" என்று திருக்கோட்டியூர் நம்பிகள் அன்புக் கட்டளையிட்டார். அதன்படிக் கிடாம்பியாச்சான் சமைத்து அளிக்கும் உணவையே அன்று முதல் உடையவர் உண்டு வரலானார்.

தன் சூழ்ச்சி பலனற்றுப் போகவே, வேறொரு சூழ்ச்சி மூலம் உடையவரைக் கொல்லக் கோயில் ஸ்தானிகன் தீர்மானித்தான். நாள்தோறும் உடையவர் திருவரங்கர் திருக்கோயில் தீர்த்தம் பருகி வருவது வழக்கம். ஒருநாள் அந்தத் தீர்த்தத்தில் நஞ்சினைக் கலந்து உடையவருக்குக் கோவில் ஸ்தானிகன் அளித்தான். அதனை விருப்புடன் வாங்கி உண்டு உடையவர் பெரிதும் மகிழ்ந்தார்.

திருவரங்கனின் திருவிளையாடலே இது என்று எண்ணிக் குதூகலத்துடன் உடையவர் கூத்தாடத் தொடங்கினார். நஞ்சு தன் வேலையைச் செய்கிறது என்று எண்ணி அந்தக் கொடியவன் அகம் மகிழ்ந்தான். மறுநாள் மேலும் தெய்வீகப் பொலிவுடன் விளங்கிய உடையவரின் திருவடிகளில் வீழ்ந்து வணங்கித் தன் கொடிய செயலுக்கு மன்னிப்புக் கோரினான் கோவில் ஸ்தானிகன்.

நஞ்சிட்டவனுக்கும் தமது நல்ல உள்ளத்தைப் புலப்படுத்திக் கருணை புரிந்தார் உடையவர்!

## வாதி சீடரானார்!

எம்பெருமானாரின் சீரிய தொண்டினாலும், கூரிய புலமையினாலும் வைணவம் தழைத்தோங்கித் தலைதூக்கி நின்றது. இதுகண்டு பொறாமை கொண்டனர் சிலர். அவர்களுள் யக்ஞமூர்த்தி என்பவரும் ஒருவர்.

யக்ஞ மூர்த்தி சிறந்த மாயாவாதி. அவர் வடநாடு முழுவதும் விஜயம் செய்து தமது மாயாவாதக் கொள்

கையைப் பரப்பிப் புகழ் பெற்ருர். கங்கைக் கரையில் துறவறமும் மேற்கொண்டார். தென்னாட்டில் இராமாநுஜர் என்பவர் மாயாவாதக் கொள்கையைக் கண்டித்துத் தம் வைணவ சித்தாந்தத்தைப் பரப்பி வருகிருர் என்று பிறர் சொல்லக் கேட்டறிந்தார். நூல்கள் நிறைந்த வண்டி ஒன்று தம்மைப் பின்தொடரத் திருவரங்கம் நோக்கி விரைந்தார். தாம் நிரம்பக் கற்றவர் என்பதைப் பிறர் அறிந்து கொள்ளவேண்டும் என்பதற்காகவே, தாம் எங்கு சென்ருலும் நூல்கள் நிறைந்த வண்டியொன்று தம்மைத் தொடர்ந்து வருமாறு செல்வார்.

யக்ஞமூர்த்தி திருவரங்கத்தை அடைந்தார். இராமாநுசரைக் கண்டார். தம்முடன் சாஸ்திரார்த்த் சம்பந்தமாக வாதப் போர் புரிய வேண்டும் என்று கேட்டுக் கொண்டார். இது கேட்டு இராமாநுசர் புன்முறுவல் பூத்தார்.

*இராமாநுசர்* : பெரியீர்! நூல்களின் நுண்பொருளை வெளிப்படுத்துவதற்கு வாதம் தேவை இல்லையே! மேலும், தாங்கள் நாடுமுழுவதும் நடந்து சென்று தங்கள்பெரும்புலமையை வெளிப்படுத்துயுள்ளீர்! உமக்கு எங்கு சென்ருலும் வெற்றியே! அப்படியிருக்க வாதப் போர் எதற்கு?

*யக்ஞமூர்த்தி* அப்படியா? மகிழ்ச்சி. மனத்தை மயக்கும் வைணவத்தைவிட்டு தெளிந்த கொள்கையையுடைய மாயாவாதத்தைக் கடைப்பிடிப்பீரா?

*இராமாநுசர்* : மாயாவதத்தைக் கைக்கொள்ளும் போது தான் மனமயக்கம் மிகுந்து பித்தனைப் போலாக வேண்டியுள்ளது. தெளிவற்ற கொள்கையையுடையது மாயாவாதமே! தருக்கம், யுக்தி ஆகியனவும் தம் மாயை படைத்தவனாகவே உள்ளன. எனவே, மயக்கமுற்ற தெளிந்த நிலையினை அளிக்கவல்லது மாயாவாதம் என்று பின்பற்ற முடியும்?

*யக்ஞமூர்த்தி* : இடம், காலம், காரணம் எனப்படும் இவற்றிடையே நிகழ்கின்ற செயல்களைப் பார்த்தால், அவையாவும் மாயையின் மயமாகவே உள்ளதை அறியலாம். இடம், காலம், காரணம் எனப்படும் மூன்றையும் நீங்கி வாழ்ந்தால் மயக்கமற்ற உண்மையைக் காணலாம். ஆனால் இம்மூன்றையும் நீக்கி வாழ்தல் அரிதல்லவா? நீங்களும் இடம், காலம், காரணத்தால் கட்டுப்பட்டுத்தானே இருக்கிறீர்கள். அப்படியிருக்க நீங்கள் மட்டும் மயக்கமுற்று மாயையிலிருந்து நீங்கி வாழ்தல் எங்ஙனம் இயலும்!

இவ்வாறு யக்ஞ மூர்த்திக்கும் உடையவருக்கும் பதினேழு தினங்கள் வாதம் நடைபெற்றது. பதினேழாம் நாள் நடைபெற்ற வாதத்தில் உடையவரின் சாதுர்யம் யக்ஞமூர்த்தியின் முன்பு எடுபடாமல் போய்விட்டது. எனவே, வருத்தமுற்றவராய்த்தம் மடத்துக்கு உடையவர் திரும்பிவிட்டார்.

தமது மடத்திலுள்ள அருளாளப் பெருமானின் எதிரே கைகூப்பி வணங்கி நின்ருர்.

"எம்பெருமானே! தேவரீரின் திருவடித்தாமரைகளைப் போற்றிப் பணியும் பாக்கியத்தை அருளுகின்ற சாத்திரங்களின் கருத்துக்களை இன்றளவும் எடுத்துக்கூறி வருகிறேன். ஆனால், மாயாவாதி வடிவில் வந்துள்ள யக்ஞமூர்த்தியிடம் வைணவ நூல்களின் ஒளிக்கீற்று மறைந்து போகின்றதே! தங்களின் யுக்தியினால் மாயாவாதிகள் தங்களையும் பிற உயிர்களையும் மங்கச்செய்து விடுகின்றனரே! அவர்களின் வாதம் சில சமயம் மகான்களையும் மயங்கச் செய்து விடுகின்றதே! தேவரீரின் குழந்தைகளாகிய நாங்கள் இன்னும் எவ்வளவு காலம் தங்களைப் பிரிந்து வாழ்வது?" என்று கனிந்துருகிக் கண்ணீர் வடித்தார்.

அன்றிரவு வரதராசப்பெருமாள் உடையாரின் கனவில் எழுந்தருளினார்.

"இராமாநுசரே! மனம் கலங்குவதேன்? பக்தி யோகத்தின் மகிமையை உலகுக்குணர்த்தவன்ருே உம் அவதாரம் நிகழ்ந்தது! உம்மை எதிர்ப்பவர் ஞானசீலமுடைய சீடராக உமக்கு அமையப் போகிருர். நீர் போற்றி வழிபடும் ஞானகுருவாகிய ஆளவந்தாரின் மாயாவாத கண்டன நூலினை ஆதாரமாகப் பற்றி நாளைய வாதத்தைத் தொடர்ந்து நடத்துவீராக வெற்றி உமக்கே!"

சொப்பனத்தில் செப்பிய வரதராசப்பெருமாளின் வாக்குப்படி வாதம் செய்யக் காலையில் படுக்கையைவிட்டு யதிராசர் எழுந்தார். அவருடைய திருமுகம் அன்றலர்ந்த மலரெனப் பொலிந்தது. காலைக் கடன்களை முடித்துக்கொண்டார். வரதராசப்பெருமானை வாயாரப் பாடித்துதித்தார். தமது ஞான குருவாகிய ஆளவந்தாரைத் தம் சிநதையுள் நிறுத்திக் கொண்டார். யக்ஞ

மூர்த்தியின் எதிரே சென்று நின்றார்.

கோடி சூரியப்பிரகாசத்துடன் குலவும் திருமுகம் கொண்டு எதிர்கஞம் யதிராசரைக் கண்டு யக்ஞ மூர்த்தி திகைப்புற்றார். வாடிய முகத்துடன் முன்னாள் சென்ற யதிராசர் இன்று வணங்கத்தக்க வடிவுடன் வந்து நிற்றலைக் கண்டு, யக்ஞமூர்த்தி அதிர்ச்சியும் ஆச்சரியமும் மிக்கவராய் அடக்கத்துடன் நின்றார்.

யக்ஞமூர்த்தி! சிந்திக்கலானார். "நேற்று வாடிய முகத்துடன் சென்றவர் இன்று கோடி சூர்யப்ரகாசத்துடன் காட்சியளிக்கின்றனரே! தெய்வ பலம் பெற்று வந்திருக்கும் அம்மானுடன் நான் வாதம் புரிவது வீணுகவே முடியும். வரட்டு வேதாந்தம் பேசி வாதம் செய்தே என் வாழ்நாளை வீழ் நாளாக்கினேன். கற்று விட்டோம் என்ற கர்வம் என்னை ஆட்டிப் படைக்கின்றது. உள்ளத்தூய்மையற்ற நான் பிரம்ம ஞானத்தை எவ்வாறு அடைவேன். இவரது முகமண்டலமோ பளிங்குபோல் தெளிந்து காணப்படுகின்றது! அகந்தை அணுகா இவரது திருமுகத்தில் ஆண்டவனின் அற்புத தரிசனம் தெரிகிறது. உள்ளத்தூய்மையற்றநான் பிரம்ம ஞானத்தை எவ்வாறு அடைவேன்? இவரது முகமண்டலமோ பளிங்கு போல் தெளிந்து காணப்படுகின்றது. அகந்தை அணுகா இவரது திருமுகத்தில் ஆண்டவனின் அற்புத தரிசனம் தெரிகிறதே! நான் இவரிடம் கடுஞ்சொல் பேசியும் கடுகடுத்தும் தர்க்கித்தேன். அப்போதெல்லாம் இவர் முகம் கோணவில்லையே! என்னை இவருடன் ஒப்பிட்டுப் பார்ப்பதென் பது மலையுடன் மடுவை ஒப்பிட்டுப் பார்ப்பதற்குச் சமமாகுமன்றோ? நான் அகந்தை நீங்கி அன்பொழுகும் அறிவு பெறவேண்டுமானால், இவரைச் சரணடைந்து சீடனாதலே தக்க செயலாகும்!" என்று நெஞ்சம் தெளிவடைந்தார் யக்ஞமூர்த்தி!

ஞானம் மிக்கவராயினும் அகந்தை மிகுந்த காரணத்தால் தம்முடைய வித்தியா பலத்தைக் காட்டி வாதிட்டு வந்த யக்ஞ மூர்த்திக்குத் தம் பூர்வ புண்ணியத்தால் அடக்கம் என்னும் பண்பு அவரிடம்' மலர்வதாயிற்று. எனவே, யக்ஞமூர்த்தி தம் எதிரில் நின்ற யதிராசரின் திருவடிகளை . இறுகப் பற்றிக் கொண்டார். அன்புடனும் ஆர்வமுடனும் அப்படியே வீழ்ந்து கிடந்தார். இதுகண்டு, இராமாநுசர் தம்முள் நாணங்கொண்டார்!

"யக்ஞமூர்த்தி! நீரோ நுண்ணிய நூல்பல கற்று நிகரற்ற புலமையோடு விளங்கி வருகின்றீர்! அத்தகைய ஞான மூர்த்தியாகிய தாங்கள் இவ்வாறு செய்யலாமா? இன்று நூல்பொருள் குறித்த வாதம் செய்யத் தாங்கள் தயங்குகின்றீர் போலும்! காரணம் என்னவோ?" என்று யதிராசர் கனிவுடன் கேட்டார்.

"பெருமைக்குரிய பெரியவரே! கல்வி கற்றோம் என்ற கர்வத்தாலே காலமெல்லாம் வாதத்திலேயே கழித்துவிட்டேன். இன்றோடு வாதம் செய்வதை அடியோடு விட்டொழிக்கிறேன். என்னைத் · தேவரீர் சீடனாக ஏற்று அருள்புரியவேண்டும்!" என்று யக்ஞமூர்த்தி வேண்டினார்.

வாரதராசப்பெருமானின் திருவிளையாடலே இதுவென உணர்ந்து யதிராசர் விம்மிதமுற்றார். சாத்திரமுறைப்படி யக்ஞ மூர்த்திக்குப் பூணூல் சூட்டி, திருமண் காப்பு சாத்திச் சங்கு சக்கரங்களைத் தோள்களில் தரிக்கச் செய்து தேவராசப் பெருமாளின் அருளால் ஞானோதயம் பெற்ற யக்ஞ மூர்த்திக்குத் தேவராசமுனி என்னும் திருநாமமும் சாத்தப்பட்டது. வித்யா கர்வம் என்னும் மேகம் இப்பொழுது முற்றிலுமாக யக்ஞ மூர்த்தியை விட்டு விலகிச் சென்று விட்டது.

(தொடரும்)



## அறிவிப்பு

ஸப்தகிரி சந்தாதாரர்களுக்கு ஆகஸ்ட் மாதத்திலிருந்து புது சந்தா எண் தரப்பட்டுள்ளது. தங்களுடைய சந்தாவைப் புதுப்பித்துக் கொள்ளும்போது தங்களுடைய புது சந்தா எண்ணையும், முதல் முறை மட்டும் பழைய சந்தா எண்ணையும் குறிப்பிடுமாறு வாசகர்கள் கேட்டுக்கொள்ளப்படுகிறார்கள்.

ஆசிரியர்.

திருமலை திருப்பதி தேவஸ்தானம், திருப்பதி.

# ஸ்ரீ வேங்கடேஸ்வரா மத்திய நூலகம் மற்றும் ஆராய்ச்சி மையம்

## விண்ணப்பம்

திருமலை திருப்பதி தேவஸ்தானத்தாரால் 'ஸ்ரீவேங்கடேஸ்வரா மத்திய நூலகம் மற்றும் ஆராய்ச்சி மையம்' ஒன்று ஏற்படுத்தப்பட்டு, அது அண்மையில் தேவஸ்தானத்தின் 1993ஆம் ஆண்டு வைரவிழா ஆண்டு ஒட்டி, பக்தர்களுக்காகத் தொடங்கி வைக்கப் பட்டுள்ளது. இந்தியக் கட்டிடக்கலை மற்றும் நவீன கட்டிடக் கலையைப் பின்பற்றி கட்டப்பட்ட மாபெரும் கட்டிடத்தில் இந்த மையம் தற்போது செயல்பட்டு வருகிறது. இந்து சமயத்தின், இந்திய மண்ணின் பெருமை பேசும் வேதங்கள், உபநிஷதங்கள், இதிஹாஸங்கள், புராணங்கள், தத்துவங்கள், சாஸ்திரங்கள் மற்றும் பகவத்கீதை ஆகியவற்றின் சம்பந்தமான அரிய நூல்கள், ஆவணங்கள் இந்தக் கட்டிடத்தில் இடம்பெற்றுள்ளன. சனாதன தர்மமான இந்து சமயத்தின் பெருமை பேசும் இந்தியக் கலாசாரம், தத்துவங்கள், சமயப் பிரிவுகள், இசை போன்றவற்றின் சம்பந்தமான ஆராய்ச்சிகள் மேற்கொள்ளவும், உரைக்கோவைகள், கருத்தரங்குகள் நடைபெறவும் இந்த மையம் செயல்படும். இந்து சமயம் சம்பந்தமான அரிய , இதுவரை வெளியிடப்படாத ஆராய்ச்சிக் கருத்துக்களும்; சம்ஸ்கிருத மொழியில் உள்ள மூல சமய நூல்கள், மொழிப்பெயர்ப்புகள் அடங்கிய நூல்களை வெளியிடுதலும் இந்த மையத்தின் பெரு முயற்சியாக அமையும். நவீன அச்சகம் ஒன்றினை நிறுவும் எண்ணமும் மேலாண்மையின் பரிசீலனையில் உள்ளது. எனவே, இந்தியக் கலாசாரக் கோயிலாகவும், தலைசிறந்த கல்வி மற்றும் ஆராய்ச்சி நிறுவனங்களுக்கு ஒரு முன்னோடியாகவும் இந்த மையம் திகழ்ந்திடவே மேலாண்மை பெருமுயற்சி எடுத்து வருகிறது. இத்திட்டம் முழு அளவில் வெற்றிபெற, தகுந்த ஊக்கமும், ஆக்கமும், அடிப்படை தேவையாகிறது.

ஆகவே இந்த நூலகத்திற்குத் தாராளமான நன்கொடை அல்லது நூல்கள் வழங்கிடுமாறு பொதுமக்களையும், தனியார் அமைப்புக்கள் மற்றும் நிறுவனங்களையும் மேலாண்மை தாழ்மையுடன் கேட்டுக்கொள்கிறது. இந்த மையம் தன்னுடைய பொதுப் பணியில் மேலும் சிறந்தோங்கிட, தனிமனிதர்கள் அல்லது தனியார் அமைப்புக்கள் தங்களிடம் உள்ள இந்து சமய மற்றும் தத்துவங்கள் பற்றிய அரிய நூல்கள் அடங்கிய தனி நூலகங்களை இலவசமாக வழங்கிடவும் கேட்டுக்கொள்ளப்படுகிறுர்கள்.

எனவே தயைகூர்ந்து தாங்கள் அனுப்ப நினைக்கும் நூல்கள் அல்லது தொகையினை (வங்கி காசோலை மூலமாக) "சிறப்பு தனி அலுவர் (Officer on Special Duty), ஸ்ரீவேங்கடேஸ்வரா மத்திய நூலகம் மற்றும் ஆராய்ச்சி மையம், திருப்பதி-517502, ஆ. மா." எனும் முகவரிக்கு அனுப்புதல் வேண்டும்.

அரங்கின்றி வட்டாடி யற்றே நிரம்பியே
நூலின்றிக் கோட்டி கொளல். --குறள்

## மதிப்புரை

திருவேங்கடமலை வரலாற்றுமாலை ஆசிரியர்: ஸ்ரீமான் உ.வே.தி.அ. கிருஷ்ணமாசார்ய ஸ்வாமி, திருப்பதி, அச்சிட்டோர்: திருமலை திருப்பதி தேவஸ்தானம், திருப்பதி-517 507, விலை: ரூ. 30, ப.294.

'திருவேங்கடமலை வரலாற்று மாலை' என்னும் இந்நூல், ஒன்பது நூற்றாண்டுகட்கு முன்பு இராமாநுசரின் சீடரான திருமலை அனந்தாழ்வான் என்னும் ஆசார்யரால் இயற்றப்பட்ட 'ஸ்ரீ வேங்கடாசல இதிகாசமாலா' என்ற வடமொழி நூலின் மொழிப்பெயர்ப்பாகும். இந்நூலை மொழி பெயர்ப்பு செய்தவர், அத்திருமலை அனந்தாழ்வான் வம்சத்தவரும், திருப்பதி திருவேங்கடவன் கீழ்த்திசைக்கல்லூரி முன்னாள் நியாய சாஸ்திரத்துறைத் தலைமை விரிவுரையாளருமான ஸ்ரீமான் உபயவேதாந்த வித்வான் தி.அ. கிருஷ்ணமாசார்ய ஸ்வாமி ஆவர்.

பல உட்பிரிவுகளைக் கொண்டு அழகிய ஏழு பூங்கொத்தின் மாலையாகத் திகழும் இந்நூலில் திருவேங்கடமலை திருமாலின் திருப்பதியே என்றும், ஸ்வாமி புஷ்கரிணி திருமாலின் தீர்த்தமே என்றும், மலையப்பன் விஷ்ணுமூர்த்தியே என்றும் இராமாநுசரால் நிறுவப்பட்ட செய்திகள் அடங்கியுள்ளன; மேலும், மூலவருக்கு வெள்ளிக்கிழமை திருமஞ்சனம், திருமண்காப்பு, திருமார்பில் லக்ஷ்மீ ப்ரதிஷ்டை, கீழ்த்திருப்பதியில் கோவிந்தராஜ ஸ்வாமி ப்ரதிஷ்டை, திருமலை அனந்தாழ்வான் வரலாறு, பெரிய ஜீயர் ஸ்வாமிகளின் தொண்டு, திருமலையில் பக்தர்கள் பின்பற்ற வேண்டிய ஒழுங்கு முறைகள் ஆகிய பல முக்கியமான செய்திகள் அடங்கிய பெட்டகமாகும்.

இந்நூலில்வேதம், காத்யாயானீய உபநிஷத்து, ஹாரீதஸ்ம்ருதி, வாமன, வராக, பாத்ம, காருட, மார்க்கண்டேய, ஸ்கந்த, சேஷதர்ம, பிரம்மாண்ட, ப்ரஹ்ம புராணங்கள், வைகாநஸ ஆகம பாஞ்சாராத்ர ஸாத்வதஸம்ஹிதை, பராசர, பாரத்வாஜ ஸம்ஹிதைகள், ஸ்ரீபாகவதம் மற்றும் ஆழ்வார் அருளிச் செயல்களில் இருந்து பல பல மேற்கோள்களைக்காட்டி உண்மைப் பொருளை நிறுவியது குறிப்பிடத்தக்கதாகும்.

இருமொழிப் புலமைநிறைந்த இவ்வாசிரியரின் மொழிபெயர்ப்பு மூலநூலின் பிரதிபிம்மமெனலாம். எடுத்துக்காட்டாக, தொடக்கத்தில் மூலவரான திருவேங்கடவனை,

"திருநெற்றியில பச்சைக் கற்பூரத் திருநாமமும் திருமுடியைவிடாத மகுடமும் அழகிய திருமூக்கும் திருக்காதுகளில் சாத்திய மகர (சுறுமீன் வடிவுள்ள) குண்டலங்களின் ஒளிவீசும் திருக்கன்னங்களும் புன்சிரிப்பும் கோவைப்பழம் போல் சிவந்து கனிந்த திருவாயிதழும், நிறைந்து, நீடித்த கருணை பொங்கிய கடைக்கண்ணோக்கமும் தானுமாய் விளங்குகின்ற திருவேங்கடமுடையானுடைய திருமுகமண்டலமும் அடியேனுடைய உள்ளதின்கண் உருவெளிப்பாடாய்த் தோன்றி உறைந்தருள்க".

என்று போற்றி, சொற்சுவை பொருட்சுவைகளையும் காட்டிப் படிப்போரைப் பரவசப் படுத்துகிறார்.

திருமலையின் பெருமையைப் பரப்பும் இத்தகைய சிறந்த நூலை நேர்த்தியான முறையில் அச்சிட்டு, எல்லோரும் வாங்கிப்படித்து உண்மைப் பொருளை உணர வெளியிட்ட, திருமலை திருப்பதி தேவஸ்தான அதிகாரிகள் பாராட்டுதற்குரியவராவர்.

டாக்டர் மா.வரதராஜன்

திருப்பதி.



### காலனியுடன் கோயிலுக்குச் செல்லலாமா?

ஹிமாசல பிரதேசத்தில் உள்ள கோயில்களுக்கு வெறும் கால்களோடு போகக்கூடாது. கோயில் வாசலில் நாரினால் செய்த காலனிகள் வழங்குவார்கள். அதை அணிந்துதான் உள்ளே போக வேண்டும்.

தொகுப்பு: இரா. தெய்வவீரலக்ஷ்மி - தூத்துக்குடி.

Edited and Published on behalf of T.T. Devasthanams by N.S. Rama Murthy, M.A., and Printed at T.T.D. Press by M. Lakshmana Rao, B.A., L.P.T., Manager, T.T.D. Press, Tirupati - 517 507

# தி.தி. தேவஸ்தானத்தாரின் அரும்பொருட் காட்சியகம்

இந்து சமயத்தின் பெருமையினையும், இந்திய மண்ணின் கலாசார அருமையினையும் பிற ருக்கு எடுத்துக் காட்டி, அவை மேலும் சிறப்புறும் வகையில் நாளைய இந்தியனைச் சிந்திக்க வைக்கும் ஒரு வாய்ப்பாக, தி.தி.தே. மேற்கொண்டு வரும் பல முயற்சிகளில் ஒன்றாகத் திகழ்வது தற்போது மேலாண்மையினால் அமைக்கப்பட்டிருக்கும் அருட்பொருட் காட்சியகங்கள். தற்போது திருமலையில் கோயிலுக்கெதிரில் உள்ள ஆயிரங்கால் மண்டபத்தில் செயல்பட்டுக் கொண்டிருக் கும் அரும்பொருட்காட்சியகமானது 27-12-80 அன்று முன்னாள் இந்தியக் குடியரசுத் தலைவர் திரு. என். சஞ்சீவி ரெட்டி அவர்களால் திறக்கப்பட்டது. இங்கு திருப்பதி மற்றும் அதைச் சுற்றியுள்ள இடங்களில் கண்டெடுக்கப்பட்டுள்ள பழங்கால நினைவுச் சின்னங்கள், கோயில்கள் சம்பந்தப்பட்ட வேலைப்பாடுகள், சிற்பங்கள், வைதீகச் சடங்கு முறைகள் யாவும் காட்சிக்கு வைக்கும் எண்ணத்தில் இக்காட்சியகம் உருவாக்கப்பட்டுள்ளது. மேலும், தி.தி. தேவஸ்தானத்தாரிடமும் மற்றைய இடங்களிலும் சேகரிக்கப்பட்ட மர வேலைப்பாடுகள், விக்ரகங்கள், உலோக உருவமைதிகள், இசைக்கருவிகள், போர்க்கருவிகள் இக்காட்சியத்தில் இடம் பெறச் செய்யும் முயற்சிகளும் மேற் கொள்ளப்பட்டன. மறைந்த அறிஞர் திரு. வேட்டூரி பிரபாகர சாஸ்திரி அவர்கள் ஆந்திர நாட்டு பல ஜமீந்தார்களிடமிருந்து சேகரிக்கப்பட்ட பொருட்களும் இக்காட்சியகத்தை அலங்கரிக்கின்றன. மற்றொரு அரும்பொருட்காட்சியகம் (எஸ்.வி. கோயில்கலை களஞ்சியம்) வைணவ நெறிமுறைகளைச் சித்தரித்திடும் வகையில் திருப்பதியில் ஸ்ரீகோவிந்தராஜ சுவாமி வடக்கு மாடவீதியில் கச்சேரி நம்மாழ்வார் கோயிலுக்கருகே பெரியாழ்வார் மண்டபத்தில் அமைந்துள்ளது. இக்காட்சியத்தில் வைணவப் பிரிவின் ஆதியும், அதன் வளர்ச்சியும், சிற்பக்கலை, கோயிற்கலை, உருவமைதிகள், ஆழ்வார்கள், திவ்ய க்ஷேத்ரங்கள் மேலும் மற்றைய கலைகள் சம்பந்தப்பட்ட பொருட்கள் இடம் பெற்றுள்ளன.

**வைணவத்தின் ஆதியும் அதன் வளர்ச்சியும் :**

இப்பிரிவில் வைணவ மதத்தின் தொன்மை விளக்கப்பட்டுள்ளது. மகாவிஷ்ணு என்று வேதத் தாலும் ஸ்ரீமந் நாராயணன் என்று உபநிஷத்துக்களாலும் வணங்கப்பெற்று வளர்ந்த திருமால் வழிபாட்டு வரலாறு விளக்கப்பட்டுள்ளது. இத்திருமால் வழிபாடு இன்று நாடு முழுவதும் 200 வழி நிலைகளில் போற்றப்படுகின்றது. வைகானஸம், பஞ்சாராத்ரம் என்ற ஆகம முறைகளில் தென்னாட்டில் வழிபடப்பட்ட வைணவம் பற்றிய. வளர்ச்சி, அட்டவணை முறையில் விளக்கப் பட்டுள்ளது. தொன்மை மிக்க வைணவத்திருத்தலங்களில் காணப்பட்ட சித்திரங்களும், 15-வது நூற்றாண்டைச் சார்ந்த அரிய சிற்ப உருவமைதிகள் குறிப்பாக நாகலாபுரம் திருக்கோயிலில் கிடைக்கப்பெற்றவைகளும் இங்குக் காட்சிக்கு வைக்கப்பட்டுள்ளன.

*கோயில் நிர்மாண விளக்கங்கள் :* ஆகம மற்றும் சிற்ப இலக்கணப்படிக் கட்டப்பட வேண்டிய கோயில் அளவு முறைகள், கோயில் கட்டுவதற்கு இடம், தேர்ந்தெடுக்கப்பட வேண்டிய நியதிகள, முறைகள் ஆகியன படங்கள், மாதிரிகள் மூலம் விளக்கப்பட்டுள்ளன.

*சிற்ப அளவு முறைகள் :* ஆண், பெண் சிற்ப உருவமைதிகள் எந்த அளவு முறைகளில் இருந்திட வேண்டும் என்ற விளக்கங்கள் இங்கு இடம் பெற்றுள்ளன.

*சிற்பங்கள் :* விஷ்ணுவின் திருவுருவ அமைதிகள், எந்தெந்த உருவமைதிகளுக்கு எந்தெந்த வகையைன ஆடை, ஆபரணங்கள் இருந்திடல் வேண்டும் என்பதை இப்பிரிவு தெளிவுற எடுத்துக் காட்டுகின்றது.

*ஆழ்வார்கள் :* தென்னாட்டில் வைணவம தழைத்தோங்க வகை செய்த ஆழ்வார்கள் மற்றும் விசிஷ்டாத்துவைதக் கொள்கையின் தந்தையான ஸ்ரீராமானுஜரின் வைணவத் தொண்டின் சிறப்பு இங்கு விளக்கப்படுகின்றது.

*வைதீகச் சடங்குகள் :* அஷ்டதஸ சம்ஸகாரங்கள் இப்பிரிவில் விளக்கப்பட்டுகின்றன. பிறப்பு முதல் இறப்பு வரை ஒவ்வொரு இந்துவும் கடைப்பிடிக்க வேண்டிய வைதீக சடங்கு முறைகள் தெளிவுறுத்தப்படுகின்றன. கோயில் வழிபாட்டின் முக்கியத்துவம் இங்குச சித்தரிக்கப்படுகின்றது. வைணவக் கோயில்களில் பயன்படுத்தப்படும் பாத்திரங்கள், வாகனங்களின் மாதிரிகளும் இங்குக் காட்சி அளிக்கின்றன.

**108 திருத்தலங்கள் :** 108 வைணவத் திருப்பதிகளில் உள்ள கோயில்களின கட்டிடச் சிறப்பு, சிற்பச் சிறப்புக்கள் போன்றவற்றைத் தெரிந்து கொள்ளும் வகையில 108 கோயில்களின் புகைப்படங்கள் இங்கு இடம்பெற்றுள்ளன.

*கலைகள் :* இப்பிரிவில் திருமாலின புகழ் பாடிய மெய்யடியார்களின் சிறப்பு தெரிவிக்கப் பட்டுள்ளது. நவீன காலம் வரை சேகரிக்கப்பட்ட விஷ்ணு, சகதி, ஷண்முகர் போன்ற பல்வேறு கடவுளர்களின் உருவமைதிகள் இங்கு இடம்பெற்றுள்ளன. குணட்ரபாக்கத்தில் 3வது ராஜராஜன் கோயிலிலிருந்து எடுக்கப்பட்ட சேகரிப்புகள் இப்பகுதியின் வரலாற்றைச் சிறபபுறக்கூறும்.

*அனுமதி நேரம்:* காலை 8 மணி முதல் இரவு 8 மணி வரை.

*அனுமதிக் கட்டணம்:* பெரியோர்: ரூ.1/- சிறுர்: 0-50.

பொறுப்பாளர்.

